கொலம்பியா
வெளியீடு



AVM புரொடக்ஷன்ஸ்

# நாம் இருவர்

டாக்கி பாட்டுகள்

...ந்திய வெளியீடு
D.K.பட்டம்மாள் பாடிய
அமரகவி பாரதியார் பாடல்கள்

GE. 6356 { ஆடுவோமே. / கொட்டு முரசே

GE. 6355 { மகான் காந்தி மகான் / கருணை மூர்த்தி காந்தி

T.R.மஹாலிங்கம் "கண்ணம்மா"

GE.6370

கண்ணில்தெரியுதொருதோற்றம் "வெண்ணிலவு

(அமரகவி பாரதியார் பாடல்கள்)

மாலைநேரமிதே

GE.6371

இகவாழ்வினிலே

வசந்தம் தரும் மாலை



ஸரஸ்வதி ஸ்டோர்ஸ்......மதராஸ். 2.

RAO

...ண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும் :

மெஸர்ஸ் .. குப்தா கார்ப்பொரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

No. 4.

விறகு லாபம்
சமய லாபம்
பண லாபம்

வறுக்கிறது..
வேகவைக்கிறது..
கொதிக்கவைக்கிறது..
பொரிக்கிறது..



ரூ. 43-12-0

# விடார்

## எலெக்ட்ரிக் குக்கர்

◆ செலவு குறைவு ◆ சிக்கனம்

◆ இனிமேல் அடுப்பு மூட்டும் கவலையேயில்லை!

**16-5-1947 முதல்**

| | | |
|---|---|---|
| மதுரை | : | விருதுநகர் |
| சிந்தாமணி டாக்கிஸிலும் | : | முத்து டாக்கிஸிலும் |

மகத்தான ஆரம்பம்

# கடகம்

தமிழ் நாடு டாக்கீஸ்

டைரக்‌ஷன்

**ஆசார்யா**



தற்போது சென்னை கேபிட்டலிலும் இதர முக்கிய நகரங்களிலும்
வெற்றிகரமான 6-வது வாரமாக ஓடிக்கொண்டிருக்கிறது

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 இதழ் 42

1947 மே 18

சர்வஜித்து வைகாசி 4





மகான்களும் தீர்க்கதரிசிகளும் தங்கள் வாழ்நாளில் ஜனங்களால் நிராகரிக்கப்படுவார்கள்; பலராலும் தூற்றப்படுவார்கள். மகான்களின் வாழ்நாள் முடிந்த பிறகு அவர்களுடைய தீர்க்கதரிசனம் உண்மையாவதைக் கண்டு மக்கள் அவர்களைப் போற்றுவார்கள்.

தமிழர்களாகிய நாம் பல விதத்தில் அதிர்ஷ்டசாலிகளா யிருப்பதைப்போல், நம் பெரியோர்களின் விஷயத்திலும் அதிர்ஷ்டசாலிகள். தமிழகத்தின் மகானான ராஜாஜியின் தீர்க்கதரிசனங்கள் உண்மையாவதைக் காண்பதற்கு ஐந்து வருஷத்துக்குமேல் நாம் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. இந்தியாவின் அரசியல் பிரச்னையையும் சமூகப் பிரச்னையையும் தீர்ப்பதற்கு அன்று ராஜாஜி சொன்ன யோசனைகளை வடநாட்டுத் தலைவர்கள் நிராகரித்தார்கள். அந்த யோசனைகளைக் கூறியதற்காகப் பலரும் அவரைத் தூற்றினார்கள். இன்றோ அவர் அன்று கூறிய யோசனைகளை அவசியம் நிறைவேற்றியே தீரவேண்டும் என்று காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் செய்திருக்கிறது. வடநாட்டுத் தலைவர்கள் ஒருமுகமாக அவற்றை வற்புறுத்துகிறார்கள்.




பதினெட்டு மாதத்துக்கு முன்னால் நமது செந்தமிழ் நாட்டில் "ராஜாஜி வேண்டாம்" என்ற ஒரு கூக்குரல் எழுந்தது. இன்று அந்தக் குரலை எங்கும் கேட்க முடியவில்லை. சென்ற வாரத்தில் ராஜாஜி தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்தபோது, நாடும் நகரமும் பொதுமக்களும் காங்கிரஸ் ஊழியர்களும் அமோகமாக அவரை வரவேற்றார்கள்; உபசரித்தார்கள். அவர் விஜயம் செய்த இடங்கள் போக, மற்ற இடங்களுக்கு வரவில்லையே என்று குறைப்பட்டார்கள்.

இந்தத் தடவை மூன்று நாளுக்குமேல் ராஜாஜியினால் தமிழ்நாட்டில் இருக்க முடியவில்லை. அதனால் என்ன? "எத்தொழிலைச் செய்தாலும் ஏதவஸ்தைப் பட்டாலும் முத்தர் மனமிருக்கும் மோனத்தே!" என்பதுபோல, ராஜாஜி எங்கே இருந்தாலும் என்ன தொண்டு புரிந்தாலும் அவருக்குத் தமிழ் நாட்டின் மீதே நினைவு; தமிழர்களிடத்திலேதான் அன்பு. தமிழ்நாட்டுக்கு வரும்போதுதான் அவருடைய உள்ளத்தில் குதூகலம் பொங்கி அகமும் முகமும் மலர்ந்திருப்பதைக் காணலாம்.

**வாழ்க ராஜாஜி! வாழ்க தமிழ்நாடு!**




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப்பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 42

# என்ன சேதி?

## சிறந்த கைங்கரியம்

இந்தியா மக்களை இரண்டு பேய்கள் ஆட்டி வந்தன. ஒன்று அடிமைத்தனப் பேய்; மற்றொன்று, அதற்கு உடந்தையான அனாரோக்கியப் பேய். இன்று அடிமைத்தனப் பேய் ஒழிந்து விட்டது. அதை ஒழித்தது போலவே அனாரோக்கியப் பேயையும் ஒழிக்கவேண்டியது நம் தலைவர்களின் கடமையாகும். அதை ஒழிப்பதற்குரிய முயற்சிகள் வெற்றி பெறச் சகலரும் உதவ வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

சென்ற வாரம் திருச்சியில் ஆரம்பமாகியுள்ள க்ஷயரோக ஆஸ்பத்திரி அத்தகைய அரும் பெரும் முயற்சிகளில் ஒன்றாகும். ராஜாஜி சென்னை மாகாணத்தின் பிரதம மந்திரியாக இருந்து, அகில இந்தியாவும் பிரமிக்கும்படி தமது மாகாண நிர்வாகத்தை நடத்திய காலத்திலே, பெருந்துறை க்ஷயரோக ஆஸ்பத்திரியைத் திறந்து வைத்தார். இப்போது திருச்சி க்ஷயரோக ஆஸ்பத்திரியைத் திறந்து வைத்தவரும் ராஜாஜி அவர்களே. மகத்தான தியாகங்கள் செய்து, நாட்டிலிருந்த அடிமைத்தனப் பேயை ஒழித்த நமது மாபெரும் தலைவர்களில் ஒருவரும், தமிழ் நாட்டின் தனிப் பெரும் தலைவருமான ராஜாஜி கொடிய க்ஷய ரோகத்தை ஒழிக்கவும் அங்குரார்ப்பணம் செய்தது முற்றிலும் பொருத்தமான காரியமே. மேற்படி ஆஸ்பத்திரி பூரண வசதிகளுடன் விளங்கப் பத்து லட்சம் ரூபாய் செலவாகும் என்றும், எனவே திருச்சி கனதனவான்கள் அதற்குத் தாராளமாக உதவி புரிய வேண்டும் என்றும் நமது தலைவர் கேட்டுக் கொண்டிருக்கிறார். பலருடைய உயிருக்கும் அபயமளிக்கும் மேற்படி கைங்கரியத்துக்கு உதவி புரிய திருச்சி மகா ஜனங்கள் போட்டி போட்டுக் கொண்டு முன் வருவார்கள் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## உடும்பு வேண்டாம்...!

ஐரோப்பிய ராஜ தந்திரிகளுக்கெல்லாம் வாத்தியார் ஸ்தானத்தில் இருப்பவர் தென்னாப்பிரிக்கப் பிரதம மந்திரியான ஜெனரல் ஸ்மட்ஸ் என்று கூறுவது உண்டு. அந்த பிடி ஆசாமிகூட 'உடும்பு வேண்டாம், கையை விட்டால் போதும்!' என்று அலறும்படியான நிலைமை இப்போது ஏற்பட்டிருக்கிறது.

இப்போது மீண்டும். கேப் மாகாணத்தில் ஐரோப்பியர்கள் வசிக்கும் பிரதேசங்களில் இந்தியர்கள் பிரவேசிக்காமல் தடுக்க உடனே தகுந்த முறைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்று ஒருவர் தென்னாப்பிரிக்கா அசெம்பிளியில் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். உடனே ஸ்மட்ஸ் என்ன செய்தார், தெரியுமா?

"இது ரொம்பக் கடுமையான சட்டம். இதைக் கொண்டு வருவது நியாயமல்ல. இது போன்ற விஷயத்தை யொட்டி ஏற்கெனவே நாம் சங்கடத்தில் மாட்டிக்கொண்டிருக்கிறோம். இனி இதுபோன்ற காரியங்களில் நிதானமாக நடந்து கொள்ள வேண்டும்" என்று ஸ்மட்ஸ் பட்டவர்த்தனமாகக் கூறி, மேற்படி தீர்மானத்தைத் தாம் ஏறெடுத்தும் பார்க்க முடியாதென்று கண்களை மூடிக்கொண்டு விட்டார்!

தென்னாப்பிரிக்காவுக்கு அவசரமாக லக்ஷக்கணக்கான கோணிகள் தேவையாக இருக்கின்றன. அவை இந்தியாவிலிருந்துதான் செல்ல வேண்டும். ஆனால், இந்தியா ஏற்றுமதியை நிறுத்தி விட்டதால் தென்னாப்பிரிக்கா மிகுந்த கஷ்டத்துக்கு உள்ளாகியிருக்கிறது, என்று தென்னாப்பிரிக்க மந்திரிகளில் ஒருவரான மூலெட் என்பவர் பிரலாபித்திருக்கிறார். இருக்கிற சங்கடம் போதும் என்று ஸ்மட்ஸ் அங்கலாய்த்துக் கொண்டிருப்பதற்கு அதுதான் காரணம்.

"இது எங்கள் தமிழ்நாடு !" -சாஸ்திரி



# சண்டி மாடு

சுமையை இழுக்க உடம்பில் பூரண சக்தி இருந்தும் சரீர அபிமானம் காரணமாகவோ அல்லது சோம்பேறித்தனம் காரணமாகவோ அதை இழுக்க மறுக்கும் மாட்டைத்தான் சண்டி மாடு என்று சொல்லுவது வழக்கம்.

மாடுகள் மாத்திரமா சண்டித்தனம் செய்கின்றன? மானிட வர்க்கத்திலும் சண்டித்தனம் செய்பவர்கள் இருக்கிறார்கள். சண்டித்தனம் செய்யும் சர்க்கார்களும் கூட இருக்கத்தான் செய்கிறார்கள்.

மாடோ அல்லது மனிதனோ சண்டித்தனம் செய்தால், அதைச் சமாளிப்பதில் அவ்வளவு கஷ்டம் இராது.

ஆனால், ஒரு சர்க்காரே சண்டித்தனம் செய்தால் அதற்குப் பரிகாரம் தேடுவது சாதாரண விஷயமல்ல.

அதிலும், ஒரு பெரும் வல்லரசு தன் சக்திக்கு மிகவும் குறைந்த ஒரு பளுவைக் கூடத் தாங்க முடியாது என்று சண்டித்தனம் செய்ய ஆரம்பிக்குமாயின், அதை அசைய வைப்ப தென்பது பகீரதன் கங்கை கொண்டு வந்த மாதிரிதான்!

* * *

கல்லில் இருந்து எண்ணெய் எடுக்க முடியுமா? மணலைக் கயிறாகத் திரிக்க முடியுமா? வானத்தை வில்லாக வளைக்க முடியுமா?

இதை யெல்லாம் காட்டிலும் எத்தனையோ மடங்கு அதி அற்புதமான, அத்தியாச்சரியமான ஒரு காரியத்தை பிரிட்டிஷ் சர்க்கார் செய்திருக்கிறார்கள்.

அதாவது உலகத்திலேயே பரம ஏழையான இந்தியாவிட மிருந்து, அமெரிக்காவுக்கு அடுத்தபடியாக உலகத்திலேயே மகத்தான செல்வம் படைத்துள்ள பிரிட்டன், சுமார் 1600 கோடி ரூபாய்க்கு மேல் கடன் வாங்கி யிருக்கிறது!

இந்தியர்களின் உயிர், உதிரம், உழைப்பு இவற்றால் உருவான மேற்படி கடன்தான் ''ஸ்டர்லிங் கடன்'' என்று சொல்லப்படுகிறது.

அந்தக் கடனை எப்போது திருப்பிக் கொடுப்பது, எப்படிக் கொடுப்பது என்பதைப் பற்றிக் கூடிய சீக்கிரம் பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதிகளுக்கும் இந்திய சர்க்கார் பிரதிநிதிகளுக்கும் லண்டனில் பேச்சு வார்த்தைகள் நடைபெறப் போகின்றன.

* * *

இந் நிலைமையில் பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரி டாக்டர் டால்டன் ஒரு வெடி குண்டு போட்டிருப்பது, இந்தியா முழுதும் மிகுந்த ஏமாற்றத்தையும் மனக் கொதிப்பையும் உண்டு பண்ணி யிருக்கிறது.

''ஸ்டர்லிங் கடன் பளுவைப் பிரிட்டன் ஏற்க முடியாது. எனவே, அதிலிருந்து கணிசமான ஒரு பகுதியைக் குறைத்துவிட வேண்டும்'', அதாவது தள்ளுபடி செய்ய வேண்டும் என்று டால்டன் கூறி யிருக்கிறார்.

பிரிட்டனிலுள்ள சகல பத்திரிகைகளும், சகல பிரமுகர்களும் நீதினைவும் நாணயப் பொறுப்பு இல்லாத டால்டன் கூற்றுக்கு ஒரே குரலாக 'ததாஸ்து' சொல்லி யிருக்கிறார்கள்.

பிரிட்டிஷாரிடமுள்ள ஒரு விசேஷம் என்னவெனில், அவர்கள் என்ன அக்கிரமம் செய்தாலும், சட்டம், ஜனநாயகம் போன்ற அழகான பெயர்களைக் கூறிக்கொண்டுதான் செய்வார்கள்.

அதாவது சட்டப்படி, ஜனநாயக முறைப்படி தாங்கள் நிரபராதிகள் என்றும், பிறர்தான் குற்றவாளிகள் என்றும் தோன்றுமாறு நடந்து கொள்வார்கள்.

இந்தியாவுக்குத் தாங்கள் கொடுக்க வேண்டிய கடன் தொகையைக் குறைக்க வேண்டும் என்பதற்கு அவர்கள் கூறும் காரணத்தைக் கேளுங்கள்.

மேற்படி கடன் அநீதியானதாம்; அக்கிரம மானதாம்; ஜப்பானியர்

களின் கையில் இந்தியா சிக்கிவிடாமல் பிரிட்டன்தான் காப்பாற்றியது என்பதை இந்தியர்கள் மறந்துவிடக் கூடாதாம்; எனவே, ஸ்டர்லிங் கடனிக் தள்ளுபடி செய்ய வேண்டும் என்று கேட்பது தர்ம நியாயமானதாம்.

இந்தியாவில் ஜப்பானின் ஆதிக்கம் ஏற்பட்டு விடாமல் இருப்பதற்காகவா இந்திய சிப்பாய்கள் ஆப்பிரிக்காவிலும், ஐரோப்பாவிலும் இரத்தம் சிந்தினர்?

அல்லது "எங்களை ஜப்பானியரிடமிருந்து காப்பாற்றுங்கள்!" என்று இந்தியர்கள் பிரிட்டிஷாரை வேண்டிக் கொண்டார்களா?

எப்படியிருக்கிறது கதை!

* * *

சென்ற வாரம் மதுரையில் நடந்த மாபெரும் கூட்டத்தில் ராஜாஜி பேசிய போது, 'ஸ்டர்லிங் கடன்' விஷயமாக பிரிட்டிஷார் செய்து வரும் சூழ்ச்சியைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

"யுத்தத்தில் இங்கிலாந்து ஜயிப்பதற்காக இந்தியர்கள் தங்களுடைய உழைப்பையும் உடைமைகளையும் இங்கிலாந்துக்கு அர்ப்பணம் செய்தார்கள். ஆகையால், நாஜிகளின் கொடுங்கோலுக்கு ஆளாகாமல் இங்கிலாந்தைக் காப்பாற்றியதாக இந்தியர்கள் சொல்லிக் கொள்ள உரிமை உண்டு.

"இந்தியர்கள், தங்களுடைய சுகதுக்கங்களைச் சிறிதும் லக்ஷியம் செய்யாமல் மகத்தான தியாகங்கள் செய்து இங்கிலாந்துக்கு உதவி புரிந்திராவிடில், பிரிட்டிஷார் இப்போது நரக வாழ்க்கையை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள்.

"ஸ்டர்லிங் கடன் பளுவைத் தாங்க பிரிட்டிஷார் மறுப்பது, வண்டியை இழுக்க மறுக்கும் மாட்டுக்கு ஒப்பாகும். எனவே, அதற்காக நாம் கோபம் கொள்ளக் கூடாது.

"சண்டித்தனம் செய்யும் மாட்டை எப்படியாவது வண்டியை இழுக்கும்படிச் செய்ய வேண்டுமேயன்றி, அந்த மாட்டைக் கொல்லுவதோ அல்லது மூடமாக்குவதோ கூடாது" என்று ராஜாஜி கூறி, பிரிட்டனின் பொய்க் கூற்றை அம்பலப்படுத்தி யிருக்கிறார்.

இந்தியா சட்ட சபை அங்கத்தினரும், நிதி சாஸ்திரத்தில் நிபுணருமான ஸ்ரீ மனு சுபேதார் பிரிட்டிஷாரின் கூற்றைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார் என்பது முக்கியமாகும்.

"ஸ்டர்லிங் கடன் சாதாரணமான கடனல்ல; அது தர்ம சொத்து போன்றதாகும். பிரிட்டன் தன்னுடைய அரசியல் அதிகாரத்தை உபயோகித்து, ஏழை இந்தியர்களைக் கசக்கிப் பிழிந்து குறைந்த கட்டுப்பாட்டு விலைக்குப் பெற்ற சாமான்களின் விலையை இப்போது கொடுக்க மறுப்பது அயோக்கியத்தனமாகும், மானங்கெட்ட செய்கையாகும், நாகரிகக் கொள்ளையாகும்" என்று மனு சுபேதார் சவுக்கடி கொடுத்திருக்கின்றார்.

'ஸ்டர்லிங் கடன் பளுவை எங்களால் தாங்க முடியாது' என்று பிரிட்டிஷார் சொல்லி யிருக்கலாம்.

அல்லது, 'நாங்கள் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளித்திருப்பதால், அதற்கு விலையாக 1000 கோடி ரூபாயைக் கடனிலிருந்து தள்ளிவிட வேண்டும்' என்று பிரிட்டிஷார் கூறி யிருந்தால் கூட ஒரு விதத்தில் யோக்கியப் பொறுப்பாக இருந்திருக்கும்.

அவ்விதமின்றி, மேற்படி கடன் அநியாயமானதென்றும் அக்கிரமமானதென்றும் கூறுவது, குதிரை கீழே தள்ளியதுமின்றி குழியும் பறித்த கதையாக இருக்கிறது.

இந்த விபரீதத்தில் ஒரு தேசம் முழுவதும் அபிப்பிராய பேதம் எதுவுமின்றி ஏகோபித்து ஈடுபட்டிருப்பது தான் இன்னும் பெரும் விசித்திரமாகும்.

* * *

அமெரிக்கா கொடுத்துள்ள கடனைத் திருப்பிக் கொடுக்க பிரிட்டன் மறுக்குமாயின், அதுகூட யோக்கியப் பொறுப்பற்ற ஒரு காரியம் என்பதைத் தவிர, அதனால் அமெரிக்காவுக்குப் பிரமாதமான கஷ்ட நஷ்டம் எதுவும் ஏற்பட்டு விடாது; அதனால் அமெரிக்காவின் பொருளாதார நிலைமையும் பாதிக்கப்பட்டு விடாது.

எனில் அரசியல் துறையிலே ஆதிக்கம் பெறுவதற்காக அமெரிக்கா பல நாடுகளுக்கும் கோடிக் கணக்கான தொகை அள்ளிக் கொடுத்து வருவதிலிருந்தே, மேற்படி தொகை திரும்பி வருமா என்பதைப் பற்றி அமெரிக்கா சிறிதளவும் கவலைப்படவில்லை என்பது சந்தேகமின்றித் தெரிகிறதல்லவா?

ஆனால், இந்தியாவின் நிலைமையோ முற்றிலும் வேறாகும். இன்று இந்தியாவின் பொருளாதார அமைப்பு உருத் தெரியாமல் சீர்குலைந்து கிடக்கிறது. அது எதிர்காலத்தில் உருவாக

வேண்டுமாயின், இந்தியாவிலிருந்து பிரிட்டன் பலாத்காரமாகப் பெற்ற ஸ்டர்லிங் கடனைத் திருப்பிக் கொடுத்துத்தான் தீர வேண்டும்.

இந்தியாவின் எதிர்கால க்ஷேமமும், இந்தியா — பிரிட்டன் நல்லுறவும் அதைத்தான் பொறுத்திருக்கிறது.

ஆகையால், இவ்விஷயமாக உலகிலேயே இணையற்ற செல்வம் படைத்த அமெரிக்காவையும் உலகிலேயே இணையற்ற வறுமை தாண்டவமாடும் இந்தியாவையும் ஒப்பிடுவதென்பது கனவிலும் கருத முடியாத விஷயம்.

* * *

ஸ்டர்லிங் கடன் இந்தியர்களின் உதிரத்தால் உருவானது. இது மிகைபடக் கூறும் விஷயமல்ல.

யுத்தகாலத்தில் இந்தியர்களுக்கு அத்தியாவசியமான பொருள்களையெல்லாம் பிரிட்டன் பலாத்காரமாக வாங்கிக்கொண்டு போய் விட்டது.

வங்காளத்திலும், பீகாரிலும், கேரளத்திலும் லக்ஷக் கணக்கானவர்கள் பஞ்சப் பேய்க்கு பலியானதற்கும், மற்றும் லக்ஷக்கணக்கானவர்கள் போதிய உணவின்றி நடைப்பிணங்கள் ஆனதற்கும் அதுதான் காரணம்.

அதனால்தான் விலைவாசிகள் இடைவிடாமல் உயர ஆரம்பித்தன. எனவே, சாமான்களைத் தேக்கிவைத்துக் கொள்ளை லாபம் பெற விரும்பிய கள்ள மார்க்கெட்டுக்காரர்களின் பாடு கொண்டாட்டமாகியது.

போதாக்குறைக்கு 1939-ம் வருஷம் நடமாட்டத்தில் இருந்துவந்த சுமார் 179 கோடி ரூபாய் கரன்ஸி நோட்டுகள் 1945-ம் வருஷத்தில் 1000 கோடிக்குமேல் அதிகமாகி விட்டன.

அதாவது நாணயச் செலாவணி முழுதும் ஒரே காகித மயமாகி விட்டது! அதனால் விலைவாசிகள் குறையவும் வழியிராமற் போய் விட்டது.

இவ்வாறாக ஜனங்களின் உயிரைப் பலி கொண்டு, ஆரோக்கியத்தையும் கெடுத்து, பொருளாதார நிலைமையையும் சீர்குலைத்த பிரிட்டன், ஸ்டர்லிங் கடன் தொகையையும் இப்போது விழுங்கப் பார்ப்பது மகா மோசமாகும்.

* * *

எனினும், இச்சந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தைக் குறித்து இந்திய மகா ஜனங்கள் சந்தோஷமடைய இடமிருக்கிறது.

அதாவது, அந்தகாரத்தில் தோன்றும் மின்னொளி போன்று, அரசியல் குழப்பங்களும் வேற்றுமைகளும் தேசத்தை அல்லோல கல்லோலப் படுத்தி வரும் இச்சமயத்தில், ஸ்டர்லிங் கடன் விஷயத்திலாவது தேசபக்தர்களுக்கும் முஸ்லிம் லீக்கர்களுக்கும் அபிப்பிராய பேதம் இராமலிருப்பது மிகவும் திருப்தியளிக்கக் கூடிய ஓர் அம்சமல்லவா?

இந்தியா சட்ட சபையில் 1947-48ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தைச் சமர்ப்பித்த போது நிதி மந்திரி லியாகத் அலிகான், ஸ்டர்லிங் கடன் விஷயமாகக் குறிப்பிட்டதை வாசக நேயர்களுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறோம்.

''இந்தியாவில் வறுமையால் வாடும் கோடிக் கணக்கான மக்களுக்கு என்னால் இயன்ற உதவியைச் செய்ய வேண்டும் என்பதே எனது ஆர்வமாகும்.

''யுத்த காலத்தில் பிரிட்டனுக்கும் இதர தேச நாடுகளுக்கும் இந்தியா எவ்வளவோ உதவி யளித்திருக்கிறது.

''அப்போது இந்தியர்கள் பட்ட கஷ்டங்கள் கணக்கில் அடங்கா. பஞ்சத்தினால் லக்ஷக் கணக்கானவர்கள் மாய்ந்தனர்.

''நமது கஷ்டங்கள் இன்னும்கூட முடிவடைந்ததாகத் தெரியவில்லை.

''நம்மை விட அதிகச் செல்வம் படைத்த நாடுகளைக் காட்டிலும் யுத்தத்துக்காக நாம் அதிக தியாகங்கள் செய்திருக்கிறோம்.

''மிகவும் பிற்போக்கான, ஏழ்மையான இந்தியர்களுக்கு நியாயமாக வர வேண்டிய கடன் தொகையை நேர்மையுள்ள எவரும் மறுக்கமாட்டார்கள். எனவே, ஸ்டர்லிங் கடனை பிரிட்டன் நியாயமாகத் தீர்க்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்பதே எனது நோக்கமாகும்'' என்று டாக்டர் லியாகத் அலிகான் கூறியிருக்கிறார்.

ஆகையால், அவரது தலைமையில் லண்டனுக்குச் சென்றுள்ள இந்தியப் பிரதிநிதிகள், எதிர்காலத்தில் இந்தியாவின் பொருளாதார க்ஷேமத்துக்கு இன்றியமையாத ஸ்டர்லிங் கடன் விஷயத்தில் கண்டிப்பாக நடந்துகொள்ளுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

# அபலையின் கண்ணீர்

## கல்கி

### ஐந்தாம் பாகம்

கண்ணில் கண்ணீருடன் வாசற்படியில் நின்ற அபலைப் பெண்ணைப் பார்த்ததும், சிவராஜின் நெஞ்சம் இளகியது. அவள் பேரில் அவனுக்கு ஏற்பட்டிருந்த சந்தேகங்கள் கோபங்கள் எல்லாம் ஒரு நொடியில் பறந்து போயின.

இன்ஸ்பெக்டர் தனராஜ் அவளைப் பார்த்ததும் பூரண நம்பிக்கை ததும்பிய புன்னகை புரிந்தார். "வா, அம்மா! வா! சரியான சமயத்திலேதான் வந்து சேர்ந்தாய்! நீதான் சாமர்த்தியக்காரி என்றால் உன் தங்கையையும் அபாரமாய்ப் பழக்கி வைத்திருக்கிறாய்!" என்றார்.

அந்தச் சிறுமியோ ஒரு நிமிஷம் பிரமித்து நின்றுவிட்டு ஓரே ஓட்டமாய் ஓடிச் சென்று அக்காளைக் கட்டிக்கொண்டு அழுதாள்!

அபலைப் பெண், தொண்டர் சிவராஜின் பேரில் நெஞ்சைப் பிளக்கும் பார்வை ஒன்றைச் செலுத்திவிட்டு, பிறகு இன்ஸ்பெக்டர் தனராஜைப் பார்த்து, "ஐயா! என் தங்கையை என்ன செய்தீர்கள்?" என்று விம்மலுடன் கேட்டாள்.

"அம்மணி! உன் தங்கையை நாங்கள் ஒன்றும் செய்யவில்லை. அவள்தான் எங்களைப் படாத பாடு படுத்திவிட்டாள்! அப்பப்பா! என்ன கற்பனை! என்ன மனோதர்மம்! பொய் சொல்லும் வித்தையில் உன்னாலேகூட அவள் அருகில் அண்ட முடியாது!" என்றார் தனராஜ்.

இதைக் கேட்ட சிவராஜனின் உள்ளத்தில் ஆத்திரம் பொங்கி எழுந்தது. அவனுடைய கண்களில் தீப்பொறி பறந்தது.

"மிஸ்டர் தனராஜ்! வாயை மூடும்! என் கண் முன்னால் ஒரு பெண்ணை நீர் அவமானப்படுத்தி அவதூறு சொல்வதை என்னால் பொறுக்க முடியாது!" என்றான்.

அப்போது சிவராஜ் சிறிதும் எதிர்பாராத ஒரு காரியம் நடந்தது. அபலைப் பெண் அவனை ஏறிட்டுப் பார்த்து, "ஐயா! மன்னிக்க வேண்டும். இவர் கூறியது ஒன்றும் அவதூறு அல்ல. உண்மையைத் தான் சொன்னார். தங்களிடம் இது வரையில் நான் சொன்னதெல்லாம் பொய் தான். அவ்வப்போது என் மனதில் தோன்றிய கற்பனைகளைச் சொன்னேன். அப்படிச் சொல்வதற்குக் காரணங்கள் இருந்தன. இந்தப் பொல்லாத பெண் உங்களிடம் என்னென்ன பொய்களைச் சொன்னாளோ தெரியாது. இவளாலேதான் நான் இவ்வளவு பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டேன். ஏற்கெனவே நான் சொன்னது, இவள் சொன்னது எல்லாவற்றையும் தயவு செய்து மறந்துவிடுங்கள். இப்போது எல்லாவற்றையும் உள்ளது உள்ளபடி சொல்லிவிடுகிறேன்!" என்றாள்.

"ரொம்ப சந்தோஷம். உட்கார்ந்து சிரமபரிகாரம் செய்துகொண்டு சொல்லு. இப்போதாவது உள்ளது உள்ளபடி எல்லாவற்றையும் சொல்லிவிடு. மறுபடியும் எனக்கு வேலை வைக்காதே! முதலில், உன்னுடைய உண்மையான பெயர் என்ன என்று சொல்லு!" என்றார் தனராஜ்.

அபலைப் பெண் அவரைக் கம்பீரமாகப் பார்த்து, "ஐயா! என் உண்மைப் பெயர் மிஸ் வனஜா! ஆனால் உங்களுக்கு ஒன்று

சொல்லி விடுகிறேன். ஏதோ உங்களுடைய அதிகாரத்துக்குப் பயந்து நான் இங்கே உண்மையைச் சொல்ல வந்ததாக நினைக்க வேண்டாம். இந்த உத்தமரிடம் பொய் சொல்லி ஏமாற்றினேனே என்று என் மனம் என்னை வதைத்துக் கொண்டிருக்கிறது. என்னுடைய அறிவீனத்தினால் இவருக்கு நேர்ந்த பெரும் ஆபத்தை நினைத்தால் என் நெஞ்சு பதைக்கிறது. இவரிடம் உண்மையைச் சொல்லி மன்னிப்புக் கேட்டுக் கொள்ளத்தான் வந்தேன். உம்மைத் தேடிக்கொண்டு வரவில்லை" என்றாள்.

"அம்மணி, அப்படியானால் நான் இங்கு இருக்கலாமா, கூடாதா? போகச் சொன்னால் போய்விடுகிறேன்!......" என்று தனராஜ் சொல்வதற்குள், சிவராஜ் குறுக்கிட்டு, "இன்ஸ்பெக்டர்! தாங்கள் போய் விடுவதே நல்லது!" என்றான்.

இன்ஸ்பெக்டர் கனைத்துக் கொண்டே, "சரி; நான் போய்விடுகிறேன். இந்த விவகாரத்தில் நான் தலையிட்டதே பிசகு! இப்போதாவது கையைக் கழுவி விடுகிறேன்!" என்று சொல்லிக் கொண்டு எழுந்தார்.

"வேண்டாம், இன்ஸ்பெக்டர் ஸார்! தயவு செய்து உட்காருங்கள். தங்கள் மனதிலிருப்பது எனக்குத் தெரியும். மறுபடியும் ஏதோ பொய்யும் புளுகும் சொல்லி இவரை நான் ஏமாற்றப் போகிறேன் என்று நினைக்கிறீர்கள். இல்லவே இல்லை. உண்மையைத்தான் சொல்லப் போகிறேன். தாங்களும் இருந்து கேட்டு விட்டுப் போங்கள்!" என்றாள் வனஜா.

இன்ஸ்பெக்டர் தனராஜ் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு உட்கார்ந்தார். பிறகு வனஜா தன் உண்மையான வரலாற்றைக் கூறத் தொடங்கினாள். அது பின்வருமாறு:-

வனஜா ஏழைக் குடும்பத்தில் பிறந்த பெண். அவளுடைய தகப்பனார் ஏழையாயிருந்த குற்றத்தைச் செய்ததோடல்லாமல், ஊரில் போக்கிரி என்றும் முரடன் என்றும் பெயர் வாங்கியிருந்தார். போலீஸ்காரர்கள் அவர்மேல் ஒரு கண் வைத்திருந்தார்கள்; கடைசியில் கையையும் வைத்து விட்டார்கள்! ஒரு கலகக் கேஸில் பொய்யாக அவரைச் சம்பந்தப்படுத்தி ஏழு வருஷம் சிறைக்கு அனுப்பிவிட்டார்கள். அப்போது வனஜா சிறுமி. சிலகாலம் வரையில் குடும்பம் ரொம்பக் கஷ்டப்பட்டுத் தரித்திரத்தின் கொடுமையை அனுபவித்து வந்தது. வனஜாவுக்குக் கொஞ்சம் வயதான பிறகு குடும்ப நிலைமையையும் தன் பொறுப்பையும் உணர்ந்தாள். ஏற்கெனவே கொஞ்சம் படித்திருந்தவள் இன்னும் கொஞ்சம் படித்துப் போதனாமுறைப் பள்ளிக்கூடத்துக்கும் சென்றாள்; அது முடிந்ததும் உபாத்தியாயினி வேலையில் அமர்ந்தாள்.

தகப்பனார் சிறை சென்றபோது வனஜாவின் தங்கை அம்புஜம் கைக்குழந்தை. அவளிடம் வனஜாவுக்கு உயிர். கஷ்டத்தோடு கஷ்டமாய் அவளைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்தாள். அம்புஜம் படித்த அதே பள்ளிக்கூடத்தில் வனஜா உபாத்தியாயினி ஆனாள்.

தகப்பனார் சிறையிலிருந்து திரும்பி வந்து சேர்ந்தார். முற்றும் மாறுதல் அடைந்து நல்ல மனிதராய் வந்தார். ஆயினும் வேலை கிடைப்பது சுலபமாயில்லை. குடும்ப பாரமோ அதிகமாயிற்று. வனஜாவுக்குக் கிடைத்த சொற்ப சம்பளத்தில் ஜீவனம் நடத்துவது மிகவும் கஷ்டமாயிருந்தது.

அம்புஜம் மிகவும் குதூகலமான பெண். குடும்பக் கஷ்டத்தையும் அக்கா படும் சிரமத்தையும் அவள் நன்றாக உணர்ந்திருந்தாள். வனஜாவும் தன் துயரங்களையெல்லாம் தங்கையிடந்தான் அந்தரங்கமாகச் சொல்லுவது வழக்கம்.

அக்காவுக்கும் தங்கைக்கும் சினிமாப் பார்ப்பதில் ரொம்ப ஆசை. சினிமாப் பார்ப்பதில் மட்டும் அல்ல; சினிமாவில் நடிக்க வேண்டும் என்று ஆசை. "இப்போது தமிழ் சினிமாக்களில் நடிப்பவர்களுக்கெல்லாம் நடிக்கவே தெரியாது" என்றும், "எனக்கு மட்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைத்தால் நடிப்பு எப்படி இருக்க வேண்டும் என்பதைக் காட்டி விடுவேன்" என்றும் அக்கா வனஜா அடிக்கடி தங்கை அம்புஜத்திடம் சொல்லுவாள்.

"அக்கா! சினிமாவில் நடிப்பவர்களுக்கெல்லாம் பதினாயிரம் இருபதினாயிரம் என்று பணம் கொடுப்பார்களாமே?" என்று அம்புஜம் கேட்பாள்.

"பதினாயிரம், இருபதினாயிரம் என்ன? ஐம்பதினாயிரம், லட்சங்கூடக் கொடுக்கிறார்களாம்! எல்லாவற்றுக்கும் அதிர்ஷ்டம் வேண்டும்!" என்பாள் வனஜா.

"அதிர்ஷ்டம் தானே வரும். உனக்கு வராத அதிர்ஷ்டம் வேறு யாருக்கு?" என்பாள் அம்புஜம்.

இந்த நிலைமையில் அந்த ஊரின் பிரசித்த கண்டிராக்டர் முதலாளியான துரைராஜ் என்பவர் ஒரு ஸ்டுடியோ ஆரம்பித்து சினிமாப் படம் பிடிக்கப் போகிறார் என்ற செய்தி அவர்கள் காதில் விழுந்தது.

பத்திரிகையிலே விளம்பரமும் வந்தது. வனஜா தான் எதிர்பார்த்த சந்தர்ப்பம் வந்து விட்டதென்று எண்ணினாள். அவளுடைய ஆசைக்கும் நம்பிக்கைக்கும் அம்புஜம் தூபம் போட்டாள்.

எவ்வளவோ தயங்கித் தயங்கிக் காலம் கடத்திய பிறகு வனஜா துணிந்து சென்று கண்டிராக்டர் துரைராஜைப் பேட்டி கண்டாள். தான் சினிமாவில் நடிக்க விரும்புவதாகவும், அவர் எடுக்கப் போகும் படத்தில் தனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டாள்.

அதிர்ஷ்டவசமாகவோ, துரதிர்ஷ்டவசமாகவோ அப்போது முதலாளியின் பக்கத்தில் டைரக்டரும் இருந்தார். முதலாளியும் டைரக்டரும் ஏதோ மெதுவான குரலில் பேசிக் கொண்டார்கள். அவர்களுடைய முகத்திலே தோன்றிய புன்னகையின் பொருள் முதலில் வனஜாவுக்குப் புரியவில்லை. அப்புறம் துரைராஜ் பதில் சொன்னபோதுதான் அது கேலிப் புன்னகை என்று புரிந்தது.

"உன்னைப்போல் பல பெண்கள், சினிமாவில் நடிப்பது என்றால் ஏதோ சாமான்ய விஷயம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். நடிப்பு என்பது இலேசான காரியம் அல்ல. உனக்கு நடிப்பு என்பதே வராது என்று என்னுடைய டைரக்டர் அபிப்பிராயப்படுகிறார். நான் என்ன செய்கிறது? போய் வா!" என்றார் துரைராஜ்.

இந்தப் பதிலைக் கேட்டதும் வனஜாவின் கண்களில் கண்ணீர் வந்து விட்டது. அவள் விம்மிக் கொண்டே, "ஐயா! அப்படித் தீர்மானித்து விடவேண்டாம். தயவு செய்து எனக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்துப் பாருங்கள்!" என்றாள்.

அவளுடைய கண்ணில் கண்ணீரைக் கண்டதும், துரைராஜின் மனம் கொஞ்சம் மாறியது. டைரக்டரிடம் ஏதோ சொன்னார். ஆனால் டைரக்டரோ, "இந்தக் கண்ணீரெல்லாம் எதற்குப் பிரயோஜனம்? சினிமாவில் நிஜக் கண்ணீரே உதவாது. 'கிளிஸரின்' கண்ணீர்தான் வேண்டும். நிஜக் கண்ணீர் முகத்தைக் கெடுத்துவிடும். 'கிளிஸரின்' கண்ணீர் முத்துப்போல் பிரகாசித்துச் சோகரஸத்துக்குக் கவர்ச்சி கொடுக்கும்!" என்றார்.

வனஜா அப்போதும் விடாமல், "ஐயா! எனக்கு நடிப்புத் திறமை இருக்கிறதா, இல்லையா என்று ஏதாவது ஒரு விதத்தில் பரீட்சை பாருங்கள்! பரீட்சிக்காமலே தள்ளி விடாதீர்கள்!" என்றாள்.

கண்டிராக்டர் துரைராஜ் ஒரு நிமிஷம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பிறகு, "சரி, பார்க்கலாம். இன்று சாயங்காலம் வா! அதற்குள் ஏதாவது யோசித்து வைக்கிறேன்!" என்றார்.



வனஜா அதை நம்பி அன்று சாயங்காலம் மீண்டும் போனாள். கண்டிராக்டர் துரைராஜ் அவளைப் பார்த்ததும், "ஓகோ! வந்து விட்டாயா? வரமாட்டாய் என்று நினைத்தேன். உன்னைப் பரீட்சித்துப் பார்க்கும்படி சொன்னேனல்லவா? ஒரு பரீட்சை யோசித்து வைத்திருக்கிறேன். அதில் தேறினால், உனக்கு நடிப்புக் கலை வரும் என்று ஏற்படும். டைரக்டரிடம் சொல்லி உன்னை எடுத்துக் கொள்ளச் சொல்லுகிறேன்!" என்றார்.

"வந்தனம்! பரீட்சையைச் சொல்லுங்கள்!" என்றாள் வனஜா.

"இந்த ஊரில் சிவராஜன் என்று ஒரு காங்கிரஸ் தொண்டன் இருக்கிறானே, உனக்குத் தெரியுமா?"

"நேரில் தெரியாது; ஆனால் கேள்விப் பட்டிருக்கிறேன்!"

"ரொம்ப சரி; நேரில் தெரியாமல் இருப்பதுதான் நல்லது. சிவராஜன் ரொம்ப வைராக்ய சீலன் என்று பெயர் பெற்றவன். அவனிடம் சென்று நீ உன்னுடைய கண்ணீர் ஆயுதத்தைப் பிரயோகம் செய். நீ பெருங் கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டிருப்பதாகவும் யாரோ ஒரு பெரிய மனிதர் உன்னைத் தொந்தரவு செய்வதாகவும் அவனை நம்பும்படி செய். செய்து விட்டு, இந்த ஊர் மாணிக்கோனார் வீதியில் உள்ள என் வீட்டில் ஒருநாள் இரவு பத்து மணிக்கு உன்னைப் பாதுகாப்பதற்காக அவன் வரும்படி செய். உன்னுடைய நடிப்புத் திறமையை அப்போது ஒப்புக் கொள்ளுகிறேன். உன்னை சினிமாவில் பெரிய நட்சத்திரமாகவே செய்து விடுகிறேன்!" என்றார் கண்டிராக்டர் துரைராஜ்.

இந்த விசித்திரமான பரீட்சையைக் கேட்டு வனஜா பிரமித்து நின்றாள்.

"ஐயா! இது என்ன விபரீதமான பரீட்சை?" என்றாள் வனஜா.

"ஆகா! எட்டி முட்டி வரும்போது நீ இப்படித்தான் சொல்வாய் என்று டைரக்டர் சொன்னார். அவர் சொன்னது சரிதான். உன்னால் முடியாது. போய் வா!"

"ஐயா! என்னால் முடியாத காரியம் இல்லை. நினைத்தால் செய்து முடித்து விடுவேன். ஆனால், அது நியாயமா என்று தான் பார்க்கிறேன். எதற்காக இப்படிப் பட்ட காரியத்தைச் சொல்கிறீர்கள்?"

"பரீட்சை வையுங்கள் என்று நீதானே சொன்னாய்? அதன்படி பரீட்சை வைத்தேன். உனக்கு இஷ்டமில்லா விட்டால், திரும்பிப் போ! யார் அடிக்கிறார்கள்?"

வனஜா திட்டமான பதில் ஒன்றும் சொல்லாமலே திரும்பிச் சென்றாள். அவளுடைய முகத்தில் சோகக் குறியைப் பார்த்து, "போன காரியம் காயா, பழமா?" என்று அம்புஜம் கேட்டாள்.

வனஜா விஷயம் இன்னதென்று சொன்னதும், அம்புஜம், "இது என்ன பிரமாதம், அக்கா! தேசத் தொண்டர் சிவராஜனை எனக்குத் தெரியும். அவர் மீட்டிங்குகளில் பேசிக் கேட்டிருக்கிறேன். ஊர்வலத்திலும் பார்த்திருக்கிறேன். பெண்களைப் பற்றி அவர் ரொம்பப் பரிந்து பரிந்து பேசுவார். கட்டாயம் நாம் பரீட்சையில் ஜயிக்கலாம். அக்கா! நீ சினிமா நட்சத்திரமானால்



என்னையும் ஒரு பால நட்சத்திரம் ஆக்கி விட வேண்டும், தெரியுமா?" என்றான்.

அக்காவும் தங்கையுமாகக் கலந்து பேசிச் சிவராஜனுக்கு முதலில் கடிதம் எழுதுவது என்றும், அப்புறம் வனஜா நேரில் போய்ப் பார்ப்பது என்றும் நிர்மாணித்தார்கள்.

வனஜா தன் கைப்படக் கடிதம் எழுதுவதற்குத் தயங்கினாள். பின்னால் ஏதாவது காரியம் கெட்டுப் போனால் தன்பேரில் பழி வருமே என்று பயந்தாள். அதனால் அம்புஜத்தைக் கொண்டு எழுதச் சொன்னாள்.

சிவராஜன் வனஜாவின் பொய்க் கண்ணீரில் அடியோடு மனம் இளகி, குறிப்பிட்ட வீட்டுக்கு வரவும் சம்மதித்துவிட்டான். பிற்பாடு வனஜாவுக்குத் தன் காரியம் எப்படி முடியுமோ என்று சந்தேகம் வந்துவிட்டது. கண்டிராக்டர் துரைராஜைப் பற்றி விசாரித்ததில் அவர் பிரபல கறுப்பு மார்க்கெட் வியாபாரி என்று தெரிய வந்தது. சிவராஜன் அவரைப் பொதுக் கூட்டங்களில் சக்கைப்போடு போடுவதுண்டு என்றும் தெரிந்தது. அதன் பேரில், அக்காவும் தங்கையும் தங்களுக்குக் காரியமும் ஆகவேண்டும், சிவராஜனுக்கு ஆபத்தும் உண்டாகக் கூடாது, இதற்கு என்ன வழி என்று யோசித்தார்கள். சிவராஜனுக்கும் இன்ஸ்பெக்டர் தனராஜுக்கும் நெருங்கிய சிநேகம் உண்டு என்று தெரிந்து இன்ஸ்பெக்டருக்குக் கடிதம் எழுதினார்கள். அதை அம்புஜம் அவர் வீட்டில் கொடுத்து வரச் சென்றாள். வாசற் சேவகன் உள்ளே வைத்துவிட்டுப் போகும்படி சொன்னான். அம்புஜம் அப்படியே கடிதத்தைக் கொண்டு வைத்தபோது மேஜைமேல்தான் முதலில் சிவராஜனுக்கு எழுதிய கடிதம் இருப்பது கண்டு அதை எடுத்துக் கொண்டு வந்து விட்டாள்.

மேற்படி கடிதம் இன்ஸ்பெக்டர் வீட்டில் இருந்தது காரணமாக அக்காவுக்கும் தங்கைக்கும் மனக் குழப்பமும் பயமும் இன்னும் அதிகமாகிவிட்டன. ஏது எப்படியானாலும், அந்த இருளடைந்த வீட்டில் வனஜா இருப்பது அவசியம் என்று நிர்மாணித்து அங்கு முன்னதாகவே போயிருந்தாள். சிவராஜன் குறிப்பிட்ட சமயத்துக்கு வந்துவிட்டான். ஆனால் கண்டிராக்டர் துரைராஜோ, சினிமா டைரக்டரோ வரவில்லை. தன்னுடைய முயற்சி யெல்லாம் வீண் என்று வனஜா நிர்மாணித்து, சிவராஜனைத் திருப்பி அனுப்பிவிட்டுத் தானும் போவதற்கு ஆயத்தமானாள். அந்தச் சமயத்தில்தான் அவன் சற்றும் எதிர்பாராத விதமாகச் சிவராஜனுக்கு ஆபத்து வந்தது. நல்லவேளையாக இன்ஸ்பெக்டர் தனராஜ் சமயத்தில் வந்து உயிரையாவது காப்பாற்றினார். அப்போது வனஜாவின் மனம் அடைந்த கலவரத்தில் எப்படியாவது தப்பிச் சென்றால் போதும் என்றும் ஓடிவிட்டாள். ஆனால் நாளு நாளாக நினைந்து நினைந்து வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள். இப்போது இன்ஸ்பெக்டர் தன் தங்கையை வழியில் பிடித்து அழைத்துப் போனதாகக் கேள்விப்பட்டுத் துணிச்சல் அடைந்து அவளைத் திருப்பி அழைத்துப் போவதற்காக இன்ஸ்பெக்டர் வீட்டுக்கு வந்தாள். அதோடு உண்மையைச் சொல்லி விட வேண்டும் என்ற ஆர்வமும் அவளை அங்கு வரும்படி தூண்டியது.

• • •

வனஜா கூறிய வரலாற்றை தனராஜ், சிவராஜ் இருவரும் கவனமாகக் கேட்டுக் கொண்டு வந்தார்கள். கதை முடிந்ததும் வனஜா இன்ஸ்பெக்டர் தனராஜைப் பார்த்து, "ஐயா! உள்ளது உள்ளபடி சொல்லி விட்டேன். பெண் புத்தி பின் புத்தி என்ற பழமொழி ரொம்பவும் உண்மை. என்னுடைய அறிவீனத்தினால் தங்கள் சிநேகிதருடைய உயிருக்கே ஆபத்து உண்டு பண்ணிவிட்டேன். ஆனால் வேண்டுமென்று செய்யவில்லை. என்னையும் என் தங்கையையும் மன்னித்து விடுங்கள். என் தங்கையை அழைத்துப் போக அனுமதி கொடுங்கள்!" என்று உருக்கமான குரலில் வேண்டிக் கொண்டாள்.

இன்ஸ்பெக்டர் தனராஜின் முகத்தில் மறுபடியும் அந்தப் பழைய அவநம்பிக்கைப் புன்னகை தோன்றியது. "வனஜாவை உற்றுப் பார்த்து, "உள்ளது உள்ளபடி எல்லாவற்றையும் சொல்லி விட்டாயா? அல்லது இன்னும் ஏதாவது பாக்கி வைத்திருக்கிறாயா?" என்று கேட்டார்.

அப்போது அக்கா, தங்கை இருவரும் ஒரு கணம் திடுக்கிட்டதுபோல் தோன்றியது. அது இன்ஸ்பெக்டர் கண்ணுக்கு மட்டும்தான் தெரிந்தது. இருதயம் அடியோடு உருகிக் கரைந்து போயிருந்த சிவராஜனின் கண்ணுக்குப் புலப்படவில்லை.

"மிஸ்டர் தனராஜ்! இவர்களை இன்னும் ஏன் வதைக்கிறீர்கள்? இவர்கள் சொன்னதற்கு இன்னும் என்னதான் பாக்கி இருக்க முடியும்?" என்றான் சிவராஜ்.

(அடுத்த இதழில் முடியும்)





# இரண்டு மகத்தான புதிய இசைத்தட்டுகள்!




## ஏ.ஐ.ஆர். ஆர்கெஸ்ட்ரா

**N.18942**

மனமே ஈசன் நாமத்தை

சௌராஷ்ட்ரம் & மங்களம்

நாதஸ்வர வித்வான்
திருவாவடுதுறை (கக்காயி)

## T.N.R. நடராஜசுந்தரம்

**N.18943**

ஸிந்துபைரவி
2 பாகங்கள்



எல்லா அத்தாக்ஷி பெற்ற
வியாபாரிகளிடமும் கிடைக்கும்




# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்
டம் டம், பம்பாய், மதராஸ், டில்லி, லாகூர்

கைத்தறி ஆடைகளை
ஆதரியுங்கள்

மங்கையர் இன்றைய நாகரீகத்தில் விரும்பும் சாயத்திற்கு கியாரண்டி யுள்ள எங்கள்

"போட்டோ மார்க்"

# சேலைகளே

முதன்மை ஸ்தானம் பெற்றது

— தயாரிப்பவர்கள் —

## ஸ்ரீ சாரதா அண் கோ.,

நடேசர் சன்னதி, பழனி
(எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்)



---




## ஒருபோதும் தவறாத

## நேர் வழி

புண் புறையோடாமல் தடுத்து
குணப்படுத்தும் ஔஷதம்

லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பர்மசியுடிகல்ஸ் லிமிடெட்
தபால் பெட்டி நெ. 67, சென்னை

DJK 25.

# அழைப்பு

## கல்யாணமா! ஆண்டு நிறைவா!

**ஆயிரம் டிஸைன்களில் அழகிய பட்டாடைகள்**

★

இறங்கிய விலையில் அற்புத பார்டர்கள், அழகிய முந்திகளுடன் கண் கவர் கலர்களில் உயர்தர கொள்ளேகாலம். மைசூர், பெங்களூர், காஞ்சீபுரம், ஆரணி, கராச்சி, பனாரஸ், பெங்கால் முதலிய இடங்களிலிருந்து ஆயிரம் டிஸைன்களில் அருமையான பட்டுச் சேலைகள், டிஷ்யூ, டார்பான் ஜரிகைச் சேலைகள், மலிந்த விலையில் உயர்தர 100 செ., 80 செ., உறையூர், கோயமுத்தூர் நூல் சேலைகள், பட்டுப் பாவாடைகள், தாவணி, தோவத்துகள், கைலிகள், வேஷ்டிகள், ஷர்ட்டிங்குகள், அங்கவஸ்திரங்கள் புதிதாக வந்து குவிந்திருக்கின்றன. இன்றே வந்து பார்வையிடுங்கள்.

**ஒரே விலை — நம்பிக்கையான இடம்**

தங்கள் வரவை அன்புடன் எதிர்பார்க்கும்:

# கஸ்தூரிபாய் கம்பெனி

**உயர்தர பட்டு, நூல் ஜவுளி வியாபாரிகள்**

**மேல வீதி :: சிதம்பரம்**

---

# தி இந்தியன் பாங்க் லிமிடெட்

**தலைமை ஆபீஸ்: "இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்" வடக்கு பீச் ரோடு, மதராஸ்**

**லோகல் ஆபீஸ்கள்: எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்**

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 53,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 60,72,602 |

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

**N. கோபால அய்யர், செக்ரடரி**




சென்னைச் சட்ட சபைக்குச் சபாநாயகர் தேர்தல் நடப்பதற்குச் சில தினங்களுக்கு முன்னால் ராஜாஜி அவர்களிடம் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை வந்திருந்தார். வந்தவர் ராஜாஜியைப் பார்த்துத் தாம் சபாநாயகர் தேர்தலுக்கு நிற்கப் போவதாகவும் தம்மை ஆசீர்வதிக்க வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். அதற்கு ராஜாஜி, "அந்தப் பதவிக்கு இன்னும் யார் போட்டி போடுகிறார்கள்?" என்று கேட்டார்.

தென்னேட்டி ஸ்ரீ டி. விசுவநாதன் போட்டி போடுவதாக ஸ்ரீ சிவசண்முகம் பதிலளித்தார். உடனே ராஜாஜி, "ஸ்ரீ விசுவநாதனைக் காட்டிலும் தாங்கள் எந்த விதத்தில் அந்தப் பதவிக்குத் தகுதி?" என்று ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளையைப் பார்த்து வெகு அமைதியுடன் கேட்டார்.

மேற்படி கேள்வியானது அருகிலிருந்த என்னை ஒரு உலுக்கு உலுக்கியது. நான் நிதானம் அடைவதற்கு முன் ஸ்ரீ சிவசண்முகம் ராஜாஜியின் கேள்விக்குப் பளிச்சென்று பதில் கூறினார். "நான் சென்னை நகர சபையில் மேயராக இருந்து சபை நடத்தி அனுபவம் பெற்றிருக்கிறேன். ஸ்ரீ விசுவநாதனுக்கு அத்தகைய அனுபவம் கிடையாது. ஆகையால் நான் அவரை விடத் தகுதியுடையவன்" என்று கூறினார்.

"பேஷ்! அப்படியானால் சரி; தாங்கள் தேர்தலுக்கு நிற்பதில் எனக்கு மிகவும் சந்தோஷம்" என்று ஆசீர்வதித்து அனுப்பினார் ராஜாஜி. ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை ராஜாஜியிடம் விடை பெற்றுக் கொண்டு போன பிறகு, ராஜாஜி என்னைப் பார்த்து, "பார்த்தீர்களா? சிவசண்முகம் பிள்ளை, 'நான் ஒரு ஹரிஜன், ஆகையால் சபாநாயகர் பதவியை எனக்கு விட்டுக் கொடுக்க வேண்டும்' என்ற பலவீனமான பதிலைச் சொல்லாமல், 'எனக்குச் சபை நடத்தி அனுபவமிருக்கிறது; ஆகையால் நான் அதிக தகுதியுடையவன்' என்று கூறினார்! இந்தச் சரியான பதிலைச் சொல்லுகிறாரா என்று பார்ப்பதற்காகவே மேற்படி கேள்வியைக் கேட்டேன். ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களானாலும் சரி, வேறு யாராயிருந்தாலும் சரி, இப்படித்தான் தங்கள் தகுதியில் நம்பிக்கையுடையவர்களாய் இருக்கவேண்டும். ஸ்ரீ சிவசண்முகம் உண்மையான ஹரிஜனத் தலைவர்; சட்ட சபையையும் நன்றாய் நடத்துவார்" என்று சொன்னார்கள்.

இப்படிப்பட்ட உயர்ந்த அறிவாளியும் சிறந்த தேசபக்தரும் தெய்வபக்தியுள்ளவருமான ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளையைப் போன்றவர்களைத் தீண்டாதவர்கள் என்று ஒதுக்கி வைத்து அவர்களை நமது ஆலயங்களுக்குள் வர விடாமல் இவ்வளவு காலம் வைத்திருந்ததை நினைத்தால் நமக்கெல்லாம் எவ்வளவோ வெட்கமாக இருக்கிறது; துக்கமாகவும் இருக்கிறது.

மகாத்மாஜி ஆரம்பித்த தீண்டாமை விலக்கு இயக்கத்தைக் காங்கிரஸ்காரர்கள் கடந்த முப்பது ஆண்டுகளாகப் பிரசாரம் செய்து வருகிறார்கள். ராஜாஜி இதற்காக அல்லும் பகலும் பாடுபட்டு வந்தார். அவர் சென்னை மாகாணப் பிரதமரானவுடன் கள்ளரக்கன் தலையிலும் தீண்டாமைப் பேயின் தலையிலும் ஒரு பெரிய அடியாகக் கொடுத்து அவர்களுடைய கொடுமைகளிலிருந்து மக்களைக் காப்பாற்றினார். மதுரை ஆலயம் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டவுடன் அங்கொன்றும் இங்கொன்றுமாக ஆலயப் பிரவேசம் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இடையில் அரசியல் நிலைமை காரணமாக இந்தக் கைங்கரியம் தடைப்பட்டு நின்றிருந்தது.

மறுபடியும் நமது மாகாணத்தில் காங்கிரஸ் சர்க்கார் ஏற்பட்டவுடன் ஆலயப்



சங்கரநயினார் கோவிலில் உள்ள பிரசித்தி பெற்ற சங்கர-நாராயணர் ஆலயம்.

பிரவேச இயக்கம் வேகம் அடைந்தது. அதிலும் திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த காங்கிரஸ் நண்பர்கள் ஆலயப் பிரவேச வைபவத்தைத் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் வேகத்தில் நடத்தலானார்கள். இதுவரையில் மேற்படி ஜில்லாவிலுள்ள 350 முக்கியமான பெரிய கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டிருக்கிறார்கள். இதெல்லாம், ஆலயப் பிரவேசச் சட்டத்துக்கு முன்னால் ஆங்காங்குள்ள சாதி ஹிந்துக்களின் சம்மதத்தைப் பெற்று அவர்கள் சாதித்த காரியம். திறந்து விடப்பட்ட கோவில்களுக்குத் தரிசனம் செய்ய வரும்படியும் புதிதாகச் சில கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து விடும் வைபவத்தை நடத்தித் தரும்படியும் நமது சட்ட சபை சபாநாயகர் ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளை அவர்களையும், கல்கி ஆசிரியர் அவர்களையும் அழைத்திருந்தார்கள். அத்துடன் 'வாழ்நாள் பூராவும் தீண்டாமை விலக்குக்காக அரும்பாடு பட்டிருக்கும்' என்னையும் கருணை கூர்ந்து அழைத்தார்கள். (நேயர்களுக்கு ஒரு ரகசியச் செய்தி. என்னுடைய வாழ்நாள் அப்படி ஒன்றும் அதிகமாகி விட வில்லை. சொல்லப்போனால், என் வாழ்க்கையே இப்பொழுதுதான் ஆரம்பமாகி யிருக்கிறது!)

திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் தொண்டர்கள் சாதித்திருக்கும் மேற்படி மகத்தான வேலையைக் கண்டு அனுபவிக்கும் பொருட்டு நானும் கல்கி ஆசிரியர் அவர்களும் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸிலே புறப்பட்டோம்.

திருவாளர் சூரியன் அவர்கள் நாங்கள் எப்பொழுது திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில பிரயாணம் செய்தாலும் திண்டுக்கல்லில் தான் எங்களைச் சந்திப்பது என்ற வழக்கம் ஏற்படுத்திக் கொண்டு விட்டார் போலும்! ஆனாலும் அவரைக் காண்பதில் சிரத்தையில்லாமல் நான் அரைகுறைத் தூக்கத்தி லிருந்தேன். திடீரென்று "தமிழ்ப்பண்ணை ஸார், வாங்கோ, வாங்கோ!" என்று கல்கி ஆசிரியர் அவர்களின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்துப் பார்த்தேன். கல்கி ஆசிரியரைச் சூழ்ந்து ஏகப்பட்டவர்கள் நின்று கொண்டிருந்தார்கள். என்ன ஆபத்தோ வென்று நானும் வீரத்தோடு அந்தப் போர்க்களத்தில் புகுந்தேன். கூட்டத்திற்குள் பிரவேசித்த பிறகுதான் அது போர்க்களம் அல்ல வென்றும் 'இ-தோ-கா இயக்க'த்தைச் சேர்ந்த தொண்டர் குழாம் என்றும் தெரியவந்தது. திண்டுக்கல்லைச் சேர்ந்த ஸ்ரீ மணிபாரதி முதலிய நண்பர்கள் ஒரு கூடை இட்லியுடன் வந்திருந்து கோடைக்கானல் ரோடு வரையில் வந்து எங்களை வழி அனுப்பிவிட்டுப் போனார்கள். அவர்கள் அப்படி எதிர்பாராத முறையில் வந்து எங்களைத் திடுக்கிடச் செய்ததற்கு மூல காரண புருஷர் திருநெல்வேலி ஸ்ரீ சோமநாதன் என்று தெரிந்து கொண்டோம்.

சிவகாசி ஸ்டேஷனில் சபாநாயகர் சிவசண்முகம் பிள்ளை அவர்கள் எங்களுடன் பிரயாணத்தில் கலந்து கொண்டார்கள். திண்டுக்கல் நண்பர்கள் சபாநாயகருக்காகக் கொண்டுவந்திருந்த மாலையைக் கல்கி ஆசிரியர் வாங்கிப் பத்திரமாய் வைத்திருந்தார். சபாநாயகர் வண்டியில் ஏறிய

வுடன் திண்டுக்கல் வாசிகளின் சார்பாக அவருக்கு மாலை சூட்டினார்.

## சங்கரன் கோவில்

சில மணி நேரத்துக்கெல்லாம் 'ஜே' கோஷங்கள் சங்கரன் கோவில் ஸ்டேஷன் வந்து விட்டதாக அறிவித்தன. நாங்களும் இறங்குவதற்குத் தயாரானோம். ஆனால் எப்படி இறங்குவது? ஸ்டேஷனில் ஒரே திரளாக ஜனக் கூட்டம். திருநெல்வேலி ஜில்லா காங்கிரஸ் தலைவர்களான ஸ்ரீ சோமயாஜுலு, ஸ்ரீ மீனாட்சி சுந்தரம், ஸ்ரீ மெகநாதன் முதலியவர்களும் அவர்களுடைய திருக் கூட்டங்களும் சபாநாயகரை எதிர்கொண்டழைக்க வந்திருந்தார்கள். மெதுவாக முண்டியடித்துக் கொண்டு கூட்டத்தை ஒருவாறு சமாளித்துத் தாண்டிச் சென்றோம். ஸ்டேஷனுக்கு வெளியே நின்ற கார் ஒன்றில் உட்காரும்படி சொன்னார்கள். "இது மகாராஜாக்கள் கார்போலிருக்கிறதே!" என்று சொல்லி நான் வாய் மூடுமுன், "ஆமாம், இது நம்ம எட்டயபுரம் மகாராஜாவின் கார்தான்!" என்று பதில் கிடைத்தது. நாங்கள் வருவது தெரிந்து எட்டயபுரம் மேயர் ஸ்ரீ கந்தசாமி செட்டியார் எங்களை வரவேற்க மேற்படி மகாராஜாவின் காருடன் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்.

சங்கரன் கோவில் வீதி எல்லாம் தோரணங்கள் கட்டி அமர்க்களம் செய்திருந்தார்கள். மேள தாளங்கள் முழங்கிக் கொண்டிருந்தன. சங்கரலிங்கர் கோவிலில் புகழ் பெற்ற ஆலயம் சென்ற சில மாதங்களுக்கு முன் காங்கிரஸ் நண்பர்களின் முயற்சியால் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப் பட்டதை நேயர்கள் அறிவார்கள். மேற்படி கோவில் தமிழ்நாட்டின் முக்கியமான பெரிய கோவில்களில் ஒன்று. காசியிலிருந்து கூடத் தங்கள் குல தெய்வம் என்று சங்கரன் கோவில்

இறைவனைத் தரிசிக்க ஜனங்கள் வருவார்களாம். கோவிலின் பிரவேச வாசலை அடைந்தபோது, மேற்படி கோவிலைக் கட்டியது உக்கிரபாண்டிய மன்னன் என்றும், கோவில் கோபுரத்தை நிர்மாணித்தது தெய்வேந்திரன் என்ற ஒரு ஹரிஜன் என்றும் ஸ்தல புராணம் கூறுவதாக நண்பர் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் கூறினார். ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் சங்கரன் கோவில் காங்கிரஸ் தலைவர். அந்த ஊரில் அவர் இட்டதுதான் சட்டம். அவர் சொல்லுவதே வேதவாக்காகவும் ஜனங்கள் மதிக்கிறார்கள். ஆகையால் நானும் அவர் சொல்லிய கதைகளை 'வேதக் கதைகளாக' மதித்து நேயர்களுக்கும் சொல்லுகிறேன்.

கோவிலின் அஸ்திவாரக் கல் ஒவ்வொன்றிலும் 'இன்னின்ன குடும்பன் உபயம்' என்று குறிப்பிட்டிருப்பதை ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் சுட்டிக் காண்பித்தார். ஆகவே மேற்படி கோவிலுக்கு அஸ்திவாரமும் போட்டுக் கோபுரமும் நிர்மாணித்தவர்கள் ஹரிஜன வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தும் சொந்தக்காரர்களாகிய அவர்களை ஆலயத்துக்குள் விடாமல் இத்தனை நாளும் நம்மவர்கள் வைத்திருந்தார்கள். இது மட்டுமல்ல, இன்னுமொரு சுவாரஸ்யமான விஷயத்தையும் எனது நண்பர் மீனாட்சிசுந்தரம் கூறினார் :—

"இந்தச் சங்கர நாராயணர் கோவில் இருக்குமிடத்தில் ஆதியில் ஒரு பாம்புப் புற்று இருந்ததாம். அந்தப் புற்றை ஒரு

பின்னால் தோன்றுவது யானைப் பொம்மை அல்ல; நிஜ யானைதான்!



ஹரிஜன் மண் வெட்டி கொண்டு வெட்டினாராம். புற்றின் கால் பாகம் வெட்டி முடிந்து விட்டபோது புற்றினுள்ளிருந்த பாம்பின் வாலும் வெட்டப்பட்டு விட்டதாம். இதை யறிந்த பாண்டிய மன்னன் மனம் துடித்து அந்த இடத்திலேயே கோவிலைக் கட்டத் தீர்மானித்தானாம். அதனால்தான் சுவாமிக்கு 'கூழைவால் சங்கரன்' என்ற பெயரும் உண்டானதாகக் கூறப்படுகிறது."

கால் புற்றை வெட்டிய ஹரிஜனருடைய பெயர் மணிக்கிரீவன் என்று சொல்லி, அவருக்கும் கோவிலுக்குள் ஒரு தனிச் சிலை நிர்மாணிக்கப்பட்டிருப்பதை ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் காண்பித்தார். இதைத் தவிர இன்னொரு தனிக் கோவிலும் கோவிலுக்குத் தென் பாகத்திலிருக்கிறது. அதற்குக் 'காவல் பறையன் கோவில்' என்று பெயராம். அந்தத் தெருவுக்கே காவல் பறையன் தெரு என்று பெயராம்.

இப்படியாகச் சங்கரன் கோவில் ஆதியிலிருந்தே ஹரிஜனங்களுடன் அதிக சம்பந்தமுள்ள கோவிலாக இருந்து வந்திருக்கிறது. சைவமும் வைஷ்ணவமும் கலந்து பாதி சங்கரராகவும் பாதி நாராயணராகவும் சுவாமி எழுந்தருளியிருக்கிறார். இந்த சுவாமிக்கு வைத்தியலிங்கம் என்றும் பெயர் சொல்லுவ துண்டு. ஏனெனில் கோவில் தீர்த்தத்தையும் கோவிலுக்குள் இருக்கும் புற்று மண்ணையும் சாப்பிட்டால் தீராத வியாதிகள் தீரும் என்பது ஜனங்களுடைய நம்பிக்கை. பாம்பாட்டிச் சித்தர் அடக்கமான இடமும் இதுதானாம்.

முதல் முதலில் இந்தக் கோவில் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டபோது பல்லாயிரக் கணக்கான ஹரிஜனங்கள் மெய்ம்மறந்து பக்தியுடன் ஆண்டவனைத் தரிசனம் செய்த காட்சி வெகு அற்புதமாக இருந்ததென்றும் சொன்னார்கள். அதை நான் கண்டு களிக்கும் பாக்கியத்தைப் பெற வில்லை. ஆனால், சபாநாயகர் ஸ்ரீ சிவ சண்முகம் பிள்ளை அவர்களுடன் கோவிலுக்குச் செல்லும்போது என்னை அறியாமலே என் உடம்பில் புல்லரிப்பு ஏற்பட்டது! பக்கத்தில் வந்த கக்கனவர்களோ பக்தி பரவசராகத் தம்மையே மறந்து நடந்து கொண்டிருந்தார். எதிரில் ஒரு அழகிய பிரம்மாண்டமான யானைநிற்பதுகூட அவருக்குத் தெரியாமல் அதன்மேல் முட்டிக் கொள்ளப் பார்த்தார் என்றால், அவருடைய பக்தி எவ்வளவு கண் மூடித்தனமாகப் போயிருக்க வேண்டும் என்பதை நேயர்கள் ஊகித்துக் கொள்ளலாம்!

எத்தனையோ நூற்றாண்டுகளாக நமது மூதாதையர் ஹரிஜனங்களுக்குச் செய்து வந்த அநியாயத்திற்கு இப்போது பரிகாரம் நடைபெறுகிறது என்ற எண்ணமே அவருடைய மனதில் வட்டமிட்டுக் கொண்டிருந்திருக்க வேண்டும்.

கோவில் அர்த்த மண்டபத்துக்குள் பிரவேசித்ததும் அர்ச்சகர்கள் எங்களை முக மலர்ச்சியுடன் வரவேற்



ஹரிஜனத் தலைவருக்கு ஒவ்வொரு ஆலயத்திலும் அர்ச்சகர்கள் பரிவட்டம் கட்டி உபசரித்தார்கள்.

னார்கள். ஸ்ரீ சிவசண்முகம் பிள்ளையைச் சிறிதும் தயங்காமல் தொட்டு அவர் தலையில் பரிவட்டமும் கட்டினார்கள். தீண்டாமைப் பேய் இதைக் கண்டு அலறி ஒழிவது போன்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன்; யானை பிளிறிக் கொண்டிருந்தது!

சபாநாயகரோ இதையெல்லாம் கவனியாமல் ஆனந்தக் கண்ணீர் உகுத்துச் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார். "இத்தனை நாள் என்னாலும் என் மூதாதையர் பலராலும் தரிசனம் செய்ய முடியாமலிருந்த ஈசனே!" என்று சபாநாயகர் கதறிக் கண்ணீர் மல்கியிருக்க வேண்டும். சபாநாயகர் சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்து நமஸ்காரம் செய்த காட்சி எல்லோருடைய மனத்தையும் உருக்கும் பக்திப் பரவசக் காட்சியாக இருந்தது. கீழே விழுந்து நமஸ்காரம் செய்தால் சட்டை அழுக்காகப் போய்விடும் என்று பல சாதி—ஹிந்து பக்தர்கள் நினைக்கும் இக்காலத்தில் சபாநாயகர் ஒவ்வொரு சன்னிதானத்திலும் விழுந்து விழுந்து நமஸ்காரம் செய்த காட்சி, "சட்டை மட்டும் வெண்மையாக இருந்தால் போதாது; மனதும் சுத்தமாக இருக்க வேண்டும்" என்ற தத்துவத்தைப் போதிப்பதாக இருந்தது.



சபாநாயகர் ஒவ்வொரு சந்நிதியிலும் தரையில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துப் பக்திபரவசராய் விளங்கினார்.

ஒவ்வொரு சன்னிதானத்திலும் சபாநாயகருக்கும் கல்கிக்கும் மாலை போட்டு மரியாதை செய்தார்கள். மாலை போட்டால் நமது சபாநாயகருக்குத்தான் போட வேண்டும். ஏனெனில் மாலையின் உயர்வும் அது போடப்படும் தாத்பரியமும் அவருக்கு நன்கு தெரிகிறது! கழுத்தில் விழுந்த மாலைகளைச் சடக்கென்று கழற்றி விடாமல் கழுத்திலேயே வைத்துக் கொள்ளும் நல்ல வழக்கம் அவரிடம்தான் இருக்கிறது. ஆனால் நமது கல்கி ஆசிரியருக்கு மாலை போடுவதே வீண்தான். போட்டவுடனே கழற்றிப் பக்கத்தில் விருப்பவரிடம் கொடுத்து விடுவார். ஆனால் இதற்கு மாறாக ஒரு சமயம் கல்கிகூட ஒரு சன்னிதானத்தில் போட்ட மாலையைக் கழற்றாமலேயே நடக்க ஆரம்பித்து விட்டார். எனக்கு அவர் முகத்தை அந்தச் சமயம் பார்த்தபோது கொஞ்சம் யோசனையாகப் போய்விட்டது. மெதுவாக அவரைத் தொட்டுப் பார்த்தேன். தொட்டால்கூடத் தெரியாமல் உணர்ச்சி மங்கி விட்டது! "அந்தோ, தமிழ்நாடே! உன் தலைவிதி இப்படியாயிற்று?" என்று என்னை நானே கேட்டுக்கொண்டேன். பிறகு இனியும் சும்மா இருக்கக்கூடாது என்று நினைத்து, "ஸார், கல்கி ஸார்!" என்று இரைந்து கூப்பிட்டேன். என் குரலோசை மேள தாள ஓசைகளையும் ஊடுருவிச் சென்று கல்கியின் காதில் பாய்ந்திருக்க வேண்டும். கல்கி ஆசிரியர் திரும்பிப் பார்த்தார்.

"மாலையைக் கழற்றாமல் நடக்கிறீர்களே!" என்றேன். உடனே அவர் தம் கழுத்தைப்

பார்த்தார். கண்டார் மாலையை; உடனே கழற்றி என் கையில் கொடுத்தார். "என்ன? பக்தி பரவசமாகி மெய்ம்மறந்து விட்டீர்களோ?" என்று கேட்டேன். "என் சொந்த பக்தியினால் அல்ல; ஸ்ரீ ஷண்முகம் அவர்களின் பக்தி பரவசத்தைப் பார்த்ததனால் மெய்ம்மறந்து போனேன்!" என்றார். "நல்ல வேளை!" என்று ஆறுதல் அடைந்தேன்.

தெய்வங்களைத் தரிசனம் செய்துவிட்டு வெளியே வந்தோம். சபாநாயகரைப் பார்ப்பதற்காக ஆயிரக்கணக்கான மக்கள் கோவில் வாசலில் காத்துக் கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீ சோமயாஜுலு அவர்கள் சபாநாயகரையும் கல்கியையும் மிகப் பாராட்டி வரவேற்றார். (இந்த இடத்திலேதான் 'நாம் ஏன் இந்தக் கட்டுரையை எழுதுகிறோம்' என்று வருத்தம் எனக்கு அளவு மீறி உண்டாகிறது! ஸ்ரீ சோமயாஜுலு என்னையும் தான் 'பாராட்டிப் புகழ்ந்து பேசினார். ஆனால் அவற்றை நானே எழுதிக்கொள்ள முடியவில்லை அல்லவா? நேயர்கள் ஊகித்துத் தெரிந்து கொள்ளும்படிதான் விட வேண்டியிருக்கிறது!)

முதலில் அந்த மாபெரும் கூட்டத்தில் அடியேனுடைய 'கதா காலட்சேபம்' நடைபெற்றது. பிரசங்கம் முடியும் தறுவாயில் பலத்த கரகோஷம் உண்டாயிற்று. சரி, நம்முடைய பேச்சை ரசித்துத்தான் இவ்வளவு கரகோஷமாக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் அது சபாநாயகர் ஸ்ரீ ஷண்முகம் பிள்ளை அவர்கள் பேச எழுந்ததற்காகச் செய்யப்பட்டது என்று பின்னர் தெரிந்தது!

பலத்த கரகோஷங்களுக் கிடையே சபாநாயகர் பேசிய பேச்சைக் கொஞ்சம் அமைதியாகக் கேளுங்கள்:—"சட்டசபைக்குச் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப் படுகிறவர் ஜனநாயக ரீதிப்படி கட்சிச் சார்பற்றவராக இருக்கவேண்டியது அவசியமாகும். ஆகையால் நான் அரசியல் சம்பந்தமாக எந்தவித அபிப்பிராயமும் சொல்வதற்கில்லை. அத்துடன் நான் இங்கே பிரசங்கம் செய்யவும் வரவில்லை. கருணா மூர்த்தியான ஆண்டவனைக் கண் குளிரக் கண்டு தரிசனம் செய்யவே வந்தேன். ஆனாலும் ஒன்று சொல்ல வேண்டும். தீண்டாமை இருக்கிற வரையில் இந்த நாட்டுக்குச் சுபிட்சம் கிடையாது. அன்னியர்களும் நாட்டை விட்டுப் போகமாட்டார்கள். அரசியல் விஷயமாக நான் பேசுவது யுக்தமல்ல. ஆனாலும் ஒன்று. கிழக்கிந்தியக் கம்பெனி தஸ்தாவேஜுகளைக் கொஞ்சம் புரட்டிப் பார்த்தால், ஜாதி ஹிந்துக்களால் ஒதுக்கப்பட்ட, கொடுமை செய்யப்பட்ட ஹரிஜனங்களைப் பட்டாளத்தில் சேர்த்து அவர்களைக் கொண்டே ஆங்கிலேயர் இந்தியாவைப் பிடித்திருக்கிறார்களென்பது தெரியவரும். தேசிய விஷயமாக நான் பேசுவதற்கு வரவில்லை. ஆனாலும் ஒன்று சொல்கிறேன். ஜாதி ஹிந்துக்களுடைய கொடுமை தாங்காது ஹரிஜனங்கள் வெவ்வேறு மதத்திற்கு ஓடுகிறார்கள். இதையெல்லாம் ஜாதி ஹிந்துக்கள் மனதில் வைத்து நமது ஹிந்து மதம் க்ஷீணதசை யடைந்து விடாமல் பாதுகாக்க வேண்டும். அதிகமாக நான் பேசப் போவதில்லை. ஆனாலும் ஒரு விஷயம். இங்கிலீஷ்காரன் போய் விட்டாலும், அவனுக்குப் பதிலாக இன்னொருவன் வராமலிருக்க வேண்டும். இதற்கு ஹரிஜனங்களுடைய ஒத்துழைப்பைப் பெற வேண்டும்."

இப்படியாக, 'ஆனாலும் ஒரு விஷயம்' 'ஆனாலும் ஒன்று சொல்கிறேன்.' என்று சொல்லிக் கொண்டே, ஸ்ரீ ஷண்முகம் பிள்ளை ஒன்றைக்கூட விடாமல் முக்கியமான விஷயம் எல்லாவற்றையும் சொல்லி முடித்தார்.

(தொடரும்)

# சலனமும் சாந்தியும்

சுவாமி




துன்பங்களுக்கு முடிவு சாவு; ஆனால் சாவதற்கு மனம் ஒத்துக் கொள்ளுகிறதா? உயிராசையில் எல்லோருக்கு முள்ள பற்றுதல் எனக்கும் இன்று வரை இருக்கத் தான் இருந்தது. ஆனால், எத்தனை சுடு சொற்களைத் தான் நான் பொறுத்துக் கொள்ளுகிறது? செய்ததை மிகைப்படுத்திச் சொன்னால் மனம் அதிகமாகப் புண்படாது; செய்யாத காரியத்தைச் செய்ததாக அவதூறு சொன்னால் மனம் என்ன, கருங் கல்லா, சும்மா இருக்க?

வீட்டை விட்டு வெளியே கிளம்பி விட்டேன். மேலே நட்சத்திரங்கள் ஒன்றிரண்டு எனக்கு வழி காட்டியாகவும் துணையாகவும் இருந்து கண் சிமிட்டின. நல்ல மையிருட்டு. புத்தர் தம்முடைய மனைவி மக்களை விட்டுப் போனதைப் பற்றிச் சிறு வயதில் படித்தபோது எனக்கு நம்பிக்கை யில்லை; இன்று நான் கட்டிய கணவனை மறந்து உயிரை மாய்த்துக் கொள்ளப் போய்க் கொண்டிருக்கிறேன்.

ஒரு பெண் எதையும் சகிப்பாள்; ஆனால் புருஷன் மற்றவளை மணக்கப் போகிறான் என்றாலே, பெண் புத்தியில் விஷ விருக்ஷம் முளைத்து விடுகிறது.

எத்தனையோ பேர் எனக்குப் புத்திமதி சொல்லியதன் பயனாக, என் மனமும் சிறிது மாறியது. நானும் உயிராசை கொண்டு அந்தத் திருமணத்துக்கு என் சம்மதத்தைத் தெரிவிக்கா விட்டாலும் மறுத்துச் சொல்லாது இருந்தேன். என் புருஷர் நல்லவர்தான். ஆனால் அவருக்கும் அவருடைய

தாயாருக்கும் இல்லாத கரிசனை அவர் தமக்கைக்கு வந்து விட்டது.

எனக்குப் பிள்ளையே பிறக்கவில்லை. இதற்காக மலடி என்று பட்டம். ஜாடை மாடையாகச் சொல்லுவாள் நாத்தி. பெண்ணையும் பொறுத்துக் கொள்வான்; மலடி என்றால் பொறுக்க முடியுமா? நாத்தனார் வந்து நான்கு மாதமாக உரை மருந்து உரைத்துத் தம்பியை வசப்படுத்தி மறு தாரத்திற்கு இணங்க வைத்தாள். பெண்ணையும் போய்ப் பார்த்து நிச்சயதார்த்தம் கூட ஆகி விட்டது.

எனக்குள்ளே என்னை அறியாமலேயே பொறாமைக் கனல் பூத்தது. “சோடியாகப் பெண் வீட்டாரையே போய்ப் பார்த்து மணப் பந்தலிலே பழி வாங்குவேன்!” என்றேன். இதனால் பயந்து போய்ப் பெண் வீட்டார் பின் வாங்கினர். நாத்திக்கு என் மீது ஆத்திரம். இன்னொரு கலியாணம் முடித்து வைக்காமல் தன் வீட்டுக்குப் போவதில்லை யென்று சபதம் செய்தாள்.

ஊரில் என்னைப் பணிந்து போகும்படியும், கலியாணம் நடந்தால் நடக்கட்டுமென்றும் பலர் சமாதானம் சொன்னார்கள். ஒரு நிமிஷம் சமாதானமாக இருக்கிற மனசு, அடுத்த நிமிஷம் பேய்க் கூத்து ஆடுகிறது. எத்தனையோ கதைகளிலும், வாழ்க்கையிலும் தியாகம் செய்த பெண்களின் இதயத்தை எண்ணி வெண்ணெய்ப் புண்ணாக நொந்து கொள்வேன். என் இதயத்திலும் அந்தத் தியாகபுத்தி கடுகளவு ஏன் வரக்கூடாது என்று யோசனை திரும்பும். புத்தியை வரவர நிதானத்திற்குக் கொண்டு வந்து, “இந்த ஜன்மம் செய்த பாவம்!” என்று தேறியதோடு, மறு மணத்தை நடத்துவதில் எனக்குச் சந்தோஷமில்லா விட்டாலும் ஆட்சேபணை யில்லை யென்றேன். என் கணவரை விட நாத்தனார் அடைந்த ஆனந்தம் கொஞ்சமா, நஞ்சமா? பெண்களுக்குப் பெண்ணை வதைப்பதில் மட்டற்ற மகிழ்ச்சி; அதே போல இரக்கம் காட்டி விட்டாலும் மட்டுக்கு மிஞ்சிய இரக்கம் பிறந்து விடுகிறது!



உலைந்து போன கலியாணம் மீண்டும் உறுதியாயிற்று. நான் உண்டு, என் பாடு உண்டு. எவ்வித சிரத்தையோ, வாழ்வில் பற்றுதலோ இல்லாது நடைப்பிணம் ஆனேன். இந்த மாறுதல் காரணமாக என்மீது இரக்கம் பிறந்தது கணவருக்கு. ஆனாலும் அவருடைய அக்காக்காரிதான் எப்படியும் கலியாணத்தை நடத்தியே தீருவதாகச் சொல்லி விட்டாளே!

கலியாண ஏற்பாடுகள் ஜரூராக நடந்து வந்தன. பந்தல், வடாம், அப்பளம், ஊறுகாய் முதலான முன்னேற்பாடுகள் உற்சாகமாக நடந்து வந்தன. அன்று மாலை ஐந்து மணி இருக்கும். வீட்டிலே என் அத்தையும் சாத்தியும், இன்னும் கலியாணத்தில் உற்சாகமுள்ள சில பெண்களும் அப்பளம் இட்டுக் கொண்டிருந்தனர்.

சமையலைக் கவனித்து வந்த நான், குடி தண்ணீர் இல்லாததால் செப்புக் குடத்தை எடுத்துக் கொண்டு கிணற்றடியை நோக்கி நடந்தேன். கையில் வாளியும் கயிறும். கிணறு, வீட்டுக்குப் பின்னால். நான் நடந்து போய்க்கொண்டிருந்தேனே தவிர, மனம் ஒரு நாள் இப்படி நடந்து போனபோது அவரைச் சந்தித்த அந்த நினைவைப் பற்றியது.

## 2

சுமார் ஏழு வருஷங்களுக்கு முன்னால் அந்திப் பொழுதில் ஒரு நாள் இப்படித் தான் நான் தண்ணீர் எடுக்கப் போய்க் கொண்டிருந்தேன். செண்பக மரத்தில் பூத்திருந்த ஒரு பூ அந்தப் பிராந்தியம் முழுவதையும் 'கம்' மென்று மணத்தில் ஆழ்த்தியிருந்தது. என் உள்ளமோ பற்றுக் கோடு கொள்ள அலையும் இளங்கொடி போல அலைகிற சமயம். செண்பகப் பூவின் மீது மோகம் பிறக்கவே, அந்த மரத்தை நோக்கி நடந்தேன். மரத்தின் உச்சியில் எங்கோ பூ ஒளிந்திருந்தது, என் மனத்தின் எண்ணம் போல. மரத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தேன். பார்க்கிற பார்வையில் பூ விழுந்து விடுமா, என்ன?

தூரத்திலே இருந்த மா மரத்திலிருந்து குயிலின் கொஞ்சும் குரல்; செண்பகப் பூவின் வாசனை. எல்லாம் சேர்ந்து என் உள்ளத்தைத் தத்தளிக்கச் செய்தன. நானும் ஒரு குயிலாக மாறி அந்தச் செண்பக மரத்திலிருந்து கூவினால்......? குயிலின் குரல் வர வர ஸ்தாயி உயர்ந்தது. உவகை பொறுக்காத நானும் பதிலுக்கு 'கூ......குக்கூ...' என்று கூவினேன்.

நான் அவ்வாறு கூவுவதும் குயில் திடீரென்று தான் கூவுவதை நிறுத்திவிட்டது. நான் மீண்டும் கத்தியபோது, 'குக்கூ!' என்று ஒரு குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தால் கையில் ஒரு தோட்டியும், குடலையுமாக ஒருவர் வந்து கொண்டிருந்தார். ஓர் ஆடவன் முன்னால் குயில் போலக் கத்தினோமே என்ற வெட்கம் வந்து தலையைத் தாழ்த்திக் கொண்டேன். தலை குனிந்தாலும் கடைக்கண் அந்த ஆடவனை நோக்குகிறதே!

"மன்னிக்கணும், விளையாட்டுப் புத்தியில் பதிலுக்குக் 'குக்கூ!' எனக் கூவி விட்டேன். ஒரு பெண்ணின் குரல் அது என்று தெரியாது!" என்றார் அந்த மனிதர்.

எவ்வளவு சாதுர்யமான பேச்சு! எனக்கு வந்த சிரிப்பை அடக்க முடியாமல் 'களுக்'கென்று சிரித்து விட்டேன்.

"பெண்ணின் குரலுக்கும், குயிலின் குரலுக்கும் வித்தியாசம் தெரியவில்லையோ?"

"அவ்வளவு பெரிய சக்தியைக் கடவுள் எனக்குக் கொடுக்கவில்லை!"

அவருடைய பேச்சில் என் மனம் லயித்தது. அதற்கு அந்த இடத்தின் சூழ்நிலையே காரணமாயிருக்கலாம். கோவில் நந்தவனத்தின் பசுமை; தென்னை மரங்களின் சலசல வென்ற கீற்றுக்களின்



ஓசை; செண்பக மரத்தின் மயக்கந்தரும் நறுமணம். இத்தகைய இடத்தில் நான் அவரைப் பார்த்திரா விட்டால் அவரும் அப்படிக் கேலியாகப் பேசமாட்டார்; நானும் பேசமாட்டேன்.

சிறிது நேரம் நிசப்தம் நிலவிய பிறகு, "நீ ஊருக்குப் புதிசாக இருக்கிறாய்! நான் தினசரி எங்கள் தாத்தாவுக்குப் பூஜை செய்வதற்காக இங்கே பூ எடுக்க வருகிறவன்" என்றார்.

"தாத்தாவுக்குப் பூஜையா! உங்கள் தாத்தா பெரிய ஞானியா, என்ன?"

"இல்லை, இல்லை! தாத்தா பூஜை செய்வதற்காக நான் புஷ்பம் எடுக்க வருகிறது வழக்கம். நான் பூஜை செய்ய இன்னும் தெய்வம் கிடைக்கவில்லையே!"

"எது எது, நாவல்களில் வருகிற கதாநாயகர்கள் போலப் பேசுகிறீர்களே! செண்பகப் பூவின் மணமாக்கும் என்னை இங்கே இழுத்து வந்தது!" என்றேன்.

நான் வாய் மூடுமுன் அவர் தம் கையிலிருந்த தொரட்டியால் கிளையை வளைத்துப் பூவைப் பறித்துக் கீழே எறிய இருந்தார். நான் முந்தானையை விரித்து அந்தப் பூ கீழே விழாமல் ஏந்தினேன். ஆனால் என்ன ஏமாற்றம்! பூவைப் போடுவதாக இருந்தவர் திடீரென்று போடாமல் இருந்து விட்டார். இப்படியே இரண்டு மூன்று தரம் பூவை ஏந்த நான் முயற்சித்தும் அவர் செய்த பாசாங்கு காரணமாக ஏமாற்றம் அடைந்தேன். ஆனால் அந்த ஏமாற்றத்திலும் எனக்கு ஒரு ஆனந்தம் இருக்கத்தான் இருந்தது!

நான் கோபம் கொண்டவள்போல் கடித்துக் குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு கையை வீசி வீசி நடந்தேன். மரத்திலிருந்தபடியே, "கோபம் வேண்டாம்! இதோ, பூ!... ...நிசமாக ஏமாற்ற வில்லை. அட, உன் பேரு தெரிஞ்சாலும் கூப்பிடலாம், உன் பேரையாவது சொல்லு!" என்று விக்கி விக்கிச் சொன்னது, சற்று முன் கேட்ட குயிலின் குரலைவிட என்னுடைய செவியில் கனல் மூட்டியது. எத்தனையோ பேர் பேசுகிறதைக் கேட்ட செவிதான்; ஆனாலும் அந்தப் பேச்சில் ஏதோ மந்திர சக்தி இருந்தது!

மறுபடியும் கொஞ்சம் குரலில் எனது பெயரைக் கேட்டார். நான் "பூங்கொடி" என்று சொன்னேன். என் பெயர் வேறு. விளையாட்டும் கேளிக்கையும் அந்தப் பெயரைக் கற்பனை செய்தது.

"பூங்கொடி! இந்தா, செண்பகப் பூ!" என்றார். நான் பிகு பண்ணிக் கொண்டு நாணிக் கோணி நடந்தேன். செண்பகப் பூ என் கையில் விழுந்தது.



"ரொம்ப வந்தனம்" என்றேன்.

"இன்றுதான் இந்த மரம் புண்ணியம் செய்தது!' என்றார்.

"உங்கள் தாத்தாவுக்குத் தெரிந்தால், பூ எங்கே என்று கேட்க மாட்டாரா?"

"அந்தக் கவலை உனக்கல்லவா? உன் ஊர் எதுவோ?"

"பேச்சு, பேசப் பேச வளரும். நான் ஒரு குடம் தண்ணீர் எடுக்க வந்தவள், இங்கே வந்து விட்டேன். மேலத்தெரு கனகசப்பு இருக்கிறாரே, அவர் என் சித்தப்பா!" என்று சொல்லிவிட்டு, விடு விடு என்று நடந்தேன். நடையில் உறுதியில்லை. குழைவும் தளர்ச்சியும் பின்னலாடின. திரும்பிப் பார்க்கவே கூடாது என்று மனத்திற்குக் கட்டளையிட்டும், அது சொன்னபடி கேட்கிறதா?

குளத்தில் குளித்தவள் செண்பகப் பூவை ஈரத் தலையில் செருகியபடி நடந்தேன். ஈர உடையிலிருந்து எழும்பிய 'சரக் சரக்' என்ற ஓசை என் காதுக்கே ஒருவிதமான உற்சாகத்தைக் கொடுத்தது. பூவின் மணமோ என் தலையைக் கிறு கிறுக்கச் செய்தது. மனத்திலே நிறைவு; ஆனந்தம்.

அன்று முன்னிரவில் சித்தப்பா வீட்டுக்குள் அந்த மனுஷரும் ஒரு கிழவரும் வந்தார்கள். கிழவர் ரொம்பவும் வேடிக்கைக்காரர். பீடிகை, சம்பிரதாயம் ஏதும் இல்லாமல், "இங்கே வாரம்மா, பூக்கொடி? வெளிச்சத்திலே வா!' என்றார் கம்பீரமாக.

சித்தப்பாவும் சித்தியும் பயந்தே விட்டார்கள். நான் சிரித்தபடியே வந்தேன். என்னை ஏற இறங்கப் பார்த்த பெரியவர், "எலே, நீ பலே ஆளுடா! — ஏம்மா, உன் பேரு பூக்கொடியா?" என்றார். நான் வெட்கித் தலை குனிந்தேன். விஷயம் தெரிந்த சித்தி என் முகத்தை நிமிர்த்தினாள். நான் வீட்டுக்குள் ஓடி விட்டேன்.

"எடோ, திருட்டுப் பயலே! வைச்சிருக்கிற செண்பகப் பூக்களை வெல்லாம்!" என்ற பெரியவர், என் சித்தியைப் பார்த்து, "இந்தாம்மா, இந்தப் பூக்களை யெல்லாம் அந்தப் பொண்ணுகிட்டே கொடு! உனக்கு மகளா, அந்தப் பொண்ணு? — எலே, கனகசப்பு! பூக்கொடி உன் அண்ணன் மகளா? யோகசாலின்னு வைச்சுக்கோ! வாடா, பயலே! மத்தக் காரியம் தன்னைப்போல நடக்கும்!" என்று தம் பேரனை இழுத்துக் கொண்டு போனார்.

தெருவில் போகும்போது அவரைப் பார்த்தேன். நிலவில் குளித்தெழுந்த வெள்ளி விக்கிரகம் என் நினைவுத் திரையில் பதிந்தது. எங்கள் வாழ்வும் பூவும் மணமுமாகப் பிரிக்க முடியாத தன்மை பெற்றது.

இரண்டு வருஷத்திற்கு முன் தாத்தா காலமானதால், எங்கள் வாழ்க்கையைக் குலைக்க அவருடைய தம்பி முயன்றான். தாத்தா இருந்திருந்தால் என்னை மலடி என்று சொல்லப் பொறுப்பாரா?

## 3

என் மனம், எங்கோ தாவி எங்கோ போய் மீண்டும் பழையபடியே வந்து சேர்ந்தது. கிணற்றடியை நோக்கி நடந்தேன். எதிரில் என்ன இருக்கிறது, எங்கே நடக்கிறோம் என்ற உணர்வுகூட இல்லை. திடீரென்று ஏதோ விழுந்த சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். கிணைப் பாத்தியில் மேய்ந்து கொண்டிருந்த பசுங் கன்று தெரிந்தது. அதன் கழுத்துக் கயிற்றைப் பிடித்திருந்த சித்தியின் ஐந்து வயதுப் பிள்ளை ராஜாமணி விழுந்ததும் தெரிந்தது. அடுத்த வினாடி கன்று துள்ளி இழுத்தது தெரிந்தது. பையன் பாத்தியிலே இழுபட்டுப் போவதும் புலனாயிற்று.

அவனோ துஷ்டப் பிள்ளை; பிடிவாதம் கொண்டவன். கன்றின் முரட்டுச் சுபாவத்தை எங்கே கண்டான்? சரசரவென்று அவனை இழுத்துப் போகிறது, அது! என் புத்தி பேதலித்து நின்றதால் விரைவாக ஓடாமல், "டேய், டேய்!" என்று குரல் கொடுத்தேன். அந்தத் துஷ்டப் பிள்ளை தும்பை விட்டு வாலைப் பிடித்தது. அவ்வளவுதான், அடுத்த கணம்......?

'தொப்'பென்று கிணற்றுக்குள்ளே சத்தம். நீர்த்துளிகள் குண்டு குண்டாக வெளியே சிதறின. கன்று தாவிக் குதித்து விட்டது. என் புத்தி கலங்கிற்று. குடத்தைக் கிணைப் பாத்தியில் 'பொத்'தென்று போட்டேன். முன் பின் யோசிக்காமல் கிணற்றில் குதித்து விட்டேன். இருவரும் இரண்டு முறை மூழ்கி மூன்றாம் முறை மூழ்குமுன் ஒரு கையில் அவனை ஏந்தி இன்னொரு கையால் சுவரின் இடுக்கைப் பிடித்து நிலை நீச்சல் அடித்தவாறே குரலும் கொடுத்தேன்.

இப்படிப்பட்ட நிலையில் கால் மணி நேரம் இருந்த பின், கூக்குரல் கேட்டுப் பலர் வந்து காப்பாற்றினார்கள். பையன் பிழைப்ப

தற்காக அவளை வண்டிச் சக்கரத்தில் வைத்துச் சுற்றினார்கள். நான் கிணற்றை விட்டு மேலே வந்ததும் என்னுடைய நாத்தியின் கர்ஜனையைக் கேட்டேன்.

"அடி, சண்டாளி! மலட்டுப் பிணமே! என் பிள்ளையைக் கிணற்றில் தூக்கிப் போட்ட படுபாவி!"

அதற்குமேல் என்னென்ன வசவுகளோ? நான் அங்கிருந்து வீட்டுக்கு ஓடிவிட்டேன். நான் மலடி; பிள்ளையின் அருமை தெரியாதவள். எப்படி என்மீது அவதூறு! என் வாழ்வையே நாசமாக்கி விடுவதற்குக் கங்கணம் கட்டிக் கொண்ட அவள்மீதாவது நான் துரோக எண்ணம் கொள்ளலாம்; ஆனால் அந்தப் பிள்ளை என்னை என்ன செய்தது? அதைக் காப்பாற்றியதற்காகவா எனக்குத் திட்டும் அவதூறும்!

இந்தச் சம்பவம் நடந்தபோது மாலை ஆறு மணியிருக்கும். அந்த நிமிஷம் முதலே எனக்கு வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு வருஷமாக இருந்தது. அந்தத் திட்டுக்கும் மனவெறுப்புக்கும் சாந்தி தேடி, என் பிறந்தகம் போய் விடலாமா என்று யோசித்தேன்.

ஆனால் அங்கு போக என் மனம் விரும்பவில்லை. ஐந்து வருஷமாகப் போகாத நான் இன்று போகலாமா? என் மீது அன்பு கொண்ட அண்ணன் என்னை இன்று நிராகரிக்க மாட்டார். ஆனால், நான் அன்று பேசிய சுடுசொல் அவர் இதயத்தில் இன்னும் புண்ணாக இருக்குமே! எவ்வளவு வாஞ்சையுடன் அன்று ஐந்து வருஷங்களுக்கு முன் என்னிடம் பேசினார்!

அந்தோ, நான் இரு பக்கமும் ஆதரவற்ற பாவி!

4

ஐந்து வருடங்களுக்கு முன் என்னைக் கூட்டிப் போக அண்ணன் வந்திருந்தார். அந்தச் சமயம் என்னுடைய கணவருக்கு என்மீது ஏதோ கோபம்.

"போகிறதாக நினைப்பு இருந்தா, ஒரேயடியாக உன் வீட்டுக்கே போய்விடு!" என்று புருஷன் சொல்லும்போது, நான் என்ன சொல்ல இருக்கிறது?

அண்ணனிடம், அவருடைய கோபம் ஆறினாலு நான் கழித்துப் போகலாமென்றும், அல்லாத பட்சத்தில் இன்னும் சில மாதம் கழித்து நான் வருவதாகவும் சொன்னேன்.

தன் பேச்சையும் தன்னையும் நான் மதிக்கவில்லையென்று அண்ணன் நினைத்



துக் கொண்டார். தன்னைவிட சேர்ந்து வந்த புருஷன் உயர்ந்தவனாகி விட்டானே என்று என்மீது ஆங்காரம் பிறந்தது அண்ணனுக்கு.

நான் என்ன சொல்ல? 'வருகிறேன்!' என்றால் அவருக்குக் கோபம்; 'வரவில்லை' என்றால் அண்ணனுக்குக் கோபம்! இந்த இக்கட்டான நிலையில் தவித்தேன். அண்ணனிடம் மறுநாள் போகலாமென்று சமாதானம் சொல்லி வைத்தேன்.

மறுநாள் பந்தியில் இருவரும் சாப்பிட்டுக் கொண்டிருந்தபோது, கை தவறிக் குழம்புப் பாத்திரத்தைக் கீழே போட்டு விட்டேன். எப்போது சந்தர்ப்பம் வாய்க்கும் என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்த அவருக்குப் பளீரென்று என் கன்னத்தில் அடிக்க வசதி கிடைத்தது.

அடுத்த இலைக்கு எதிரே உட்கார்ந்திருந்த அண்ணன் என்னை ஏறிட்டுப் பார்த்தார். எச்சில் கையால் அறைந்ததால் சாதம் இரண்டொன்று என் கன்னத்தில் ஒட்டிக் கொண்டிருந்தது. கண்கள் கலங்கி விட்டன. முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு முகத்தை அலம்பப் போனேன்.

"கை கழுவத் தண்ணீர் கொண்டு வா!" என்று இரைந்தார்.

அண்ணனோ முன் கோபி. வெறித்து வெறித்து அவரைப் பார்த்தார்.

"இதோ வருகிறேன்" என்று குரல் கொடுத்தேன்.

"எருமை மாட்டில் மழை பெய்த மாதிரி வருகிறாளாம்! என்ன ஜன்மமோ?" என்றார் கோபமாக.

"ஏன், மனுஷ ஜன்மந்தான்! மனுஷன் தான் மிருகமாக மாறுகிறான்!" என்று அண்ணன் குத்தலாகச் சொன்னார், இலையில் உட்கார்ந்தபடியே.

"உமக்கு என் கோபம் பொத்துக் கொள்ளுகிறது?" என்று கேட்டார் அவர்.

"அவள் என் தங்கை!" — அண்ணன் குரலில் என்ன பெருமிதம்; என்ன செருக்கு!

வாக்குவாதம் அதிகமாகு முன் நான் குறுக்கிட்டு, "சரி, சரி; கையலம்பிவிட்டு மறுபடியும் சாப்பிட வாருங்கள்!" என்றேன்.

"சாப்பாடும் வேண்டாம்; ஒரு மண்ணும் வேண்டாம்!" என்று அவர் கையலம்பி விட்டுத் திண்ணையில் உட்கார்ந்தார். வெகு நேரம் நான் சாப்பிட அழைத்தும் அவர் வரவே யில்லை.

"நீங்கள் சாப்பிடுங்கள், அண்ணா!" என்றேன்.

அண்ணாவுக்குப் பிசைந்த சாதத்தை வாயில் போட மனமில்லை.

"எனக்கு மரியாதை கிடைத்தது, அம்மா! உன் வீட்டில் கூடுதலாக இரண்டு நாள் இருந்து விட்டேனல்லவா?" என்றார்.

"ஐயோ, அண்ணா! ஏன் வீணாக மனதைப் புண் படுத்திக் கொள்ள வேண்டும்? உங்கள் மேல் என்ன தவறு?" என்றேன்.

"என் மேல்தான் தப்பு என்கிறாயா?" என்று சீறினார் அவர், திண்ணையில் இருந்தபடியே. நான் அந்த அர்த்தப்படப் பேச வில்லை. விதி அப்படிக் கேட்டது!

"இந்த வீட்டில் இனி ஒரு நிமிஷம்கூட இந்த மிருகத்தோடு இருக்கக் கூடாது. புறப்படு!" என்றார் அண்ணா.

"போ, போய்விடு! இங்கே ஒரு விநாடியும் இருக்கக் கூடாது. போகிறாயா, உதைக்கட்டுமா?"

"எங்கே, உதைத்துப் பாருடா? ஆண் பிள்ளையானால்......?"

"நீ யாரடா கேட்கிறவன்?"

கோபம் வந்து விட்டால் புத்தியும் வாக்கும் கோணலாகப் போய்விடும். "உதைப்பேன் என்றாயே, உதை பார்க்கலாம்!" என்றார் அண்ணா.

திண்ணையில் இருந்தவர் ஓடி வந்து என் கூந்தலைப் பிடிக்கவே, இலையில் இருந்த அண்ணா மிக்க கோபங் கொண்டு அவர் கிராப்பை எட்டிப் பிடித்து எச்சில் கையால் ஓங்கிக் கன்னத்தில் இழுத்து விட்டார். அண்ணா பலசாலி. அறை பலமாகத் தாக்கிற்று. அவர் உடனே அண்ணாவின் மீது தாவினார்.

நான் தவித்தேன்; கதறினேன்; அழுதேன். "புறப்படு வெளியே! பிச்சைக்காரப் பயல்! என்ன நினைத்துக் கொண்டான், நம்மை?" என்றார் அண்ணா.

நான் அண்ணாவைக் கோபமாகப் பார்த்தேன். "சீ, நிறுத்து அண்ணா!" என்றேன்.

"என்ன! என்ன சொன்னாய்?"

"நீ எப்படி அவரை அடிக்கலாம்?"

"உன்னை அடித்தால் என் மனம் சும்மா யிருக்குமா? வா, என்னுடன்!"

"நான் உன்னுடன் வர முடியாது. போ, வெளியே! என்னை அடிக்கவும் அணைக்கவும் அவருக்கு உரிமையுண்டு! போ, அண்ணா! நீயும் ஒரு மனிதனா?"

"அட, மண்ணாங்கட்டி! உனக்காக என் நெஞ்சத் துடிப்பு இன்னும் அடங்கவில்லையே!" என்றார் அண்ணா ஒரு நீண்ட பெருமூச்சுடன்.

இவ்வளவையும் கேட்டுக் கொண்டிருந்த என் கணவர், "அவளைப் பற்றிப் பேச நீ யாரடா?" என்றார்.

அண்ணன், "அவள் என் தங்கையென்று எண்ணி உரிமை கொண்டாடினேன். இந்த நிமிஷம் முதல் அவள் என் தங்கையல்ல'" என்று சொல்லிவிட்டு வெளியே போய் விட்டார்.

அன்று முதல் பிறந்தகம் எனக்குத் தெரியாது. இன்று சாத்திரியின் கோபத்திற்கு ஆளானதால் அண்ணன் வீட்டில் கால் எடுத்து வைக்க எனக்கு உரிமையுண்டா?

கிடையாது. ஆகவே, எனக்குப் புகலிடம் சாவுதான். அதை நோக்கிப் போய்க் கொண்டிருந்தேன்.

5

இதோ, தெளிந்தோடும் ஆற்றிலே இறங்கி விடலாம். ஆனால் எனக்கு நீச்சல் தெரியுமே! உயிராசை பிறந்து நீந்தி விடுவேன். பிறகு, என் சாத்திரியின் அவச்சொல், பழிச் சொல் எல்லாம் என் காதில் விழும். என் கணவர் யாரோ ஒருத்தியுடன் கொஞ்சிக் குலாவி வாழ்வதை உயிரோடு நான் பார்த்துக் கொண்டிருக்க வேண்டும்!

இதோ, எனக்கு வாக்குக் கொடுப்பது போன்று ரயில் வண்டி இரைகிறது. தண்டவாளத்தின் மேல் தலையை வைத்து விட்டால் என்னுடன் பிறந்த விதியும் மடிந்து விடும்.

எஞ்சின் ஒளி கண்ணைப் பறிக்கிறது. அந்த ஒளி பட்டுத் தண்டவாளமே மின்னற் பாம்புபோல் நெளிகிறது. சுற்று முற்றும் புதர்களும் செடி கொடிகளும் இருப்பதால் என்னைக் காண யாராலும் இயலாது. 'தட தட' வென்று என்னுடைய நெஞ்சின் வேகத்தை அமுக்குகிறது ரயில் ஓசை. கால் குழலாடுகிறது. வீட்டை விட்டு வந்த போது இருந்த தைரியம் எங்கே? சாவு நெருங்க நெருங்க ஏன் இந்தப் பலவீனம்?

மீண்டும் என் மதனியின் வாயால் பழிச் சொல் வாங்கவா? "மலடி, மலடி!" என்று












யாரும் பரிகாசம் செய்வரோ? ஏதோ ஒரு வேகம் என்னை ரயில் தண்டவாளத்தின் பக்கம் பிசாசு போலத் தள்ளியது. ரயிலின் இரைச்சல்; ஒளி வெள்ளம்; 'தடதட' என்ற நாதம் — எல்லாமாகச் சேர்ந்து என் மனத்தில் இன்ப ரஸத்தைப் பொழிந்தன. வாவாத் தண்டவாளமே எழுப்பிக் குதிப்பதாக எனக்குத் தோன்றிற்று. அப்பா, என்ன வேகம்! என்மீது எவ்வளவு கருணை! வெளிச்சத்தின் கூச்சம் தாங்காது கண்ணை மூடிக் கொண்டேன். இன்னும் இரண்டே இரண்டு நிமிஷம்!

"பூக்கொடி! அடி சண்டாளி!" என்ற குரல் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். என் கணவர்! அந்த நடு நிசியில் என்னைத் தேடி அலைந்து அங்கே வந்து விட்டார்!

இங்கே கணவரின் குரல்; பத்தடிக்கு அப்பால் சாவின் குரல்!

தண்டவாளத்திலிருந்து என்னை வெடுக்கென்று இழுத்தார் அவர்.

ரயில் வெடவெட வென்று ஓடிக் கொண்டிருந்தது. என் நெஞ்சமும் அதே மாதிரி அடித்துக் கொண்டது.

"பூங்கொடி! நீ அவனைக் கிணற்றில் தள்ளவில்லையாம். விழுந்த அவனை நீ தான் காப்பாற்றினயாம். மூர்ச்சை தெளிந்து சொன்னன் ராஜாமணி. என்ன பைத்தியக் காரத்தனம்! இதற்கா நீ ஓடி வந்து சாகத் துணிந்தாய்?"

அவர் குரலில் கனிவும், பச்சாத்தாபமும் தொனித்தன. என் கையை ஆசையோடு தன் கைக்குள் பிடித்து வைத்துக் கொண்டார்.

அடுத்த வாரம் இன்னொருத்தியின் கரம் அவர் கைக்குள் இருக்கப் போகிறதென்ற நினைப்பு வந்தது. கையை உதறினேன்.

கை வலித்தது. அப்போது எண்ணியதெல்லாம் வீண் பிரமை! என் கணவர் வரவில்லை. சற்றுத் தொலைவில் 'சடசட, படபட' வென்று அலறிக் கொண்டு ரயில் எனக்கு அபயம் கொடுக்க வந்தது!

ஒளிக் கதிர்களின் பாய்ச்சல் தாங்காது, 'சிக்'கெனக் கண்ணை மூடினேன். ரயில் வண்டியின் வேகம் காதைத் தொளைத்துக் கொண்டிருந்தது. என்னையறியாமல், "ரயில்!...... ரயில்!" என்று கத்தினேன்.

"ஆமாம், ரயில் வருகிறது! நன்றாகப் படுத்துக் கொள். சை, அசடு! எழுந்திரு!"

"முடியாது, நான் சாகப் போகிறேன்! என் நாத்தியின் அவச் சொல், தங்களுடைய மறு மணம் இரண்டையும் நான் சகித்துக் கொண்டிருக்க மாட்டேன்!"

"அடடே, இன்னும் தீரவில்லையா, பைத்தியம்? இந்தா, இது என்னென்று பாரு? தண்டவாளமும் இல்லை; போன வருஷமும் இல்லை. கண்ணை விழித்துப் பார்!"

பார்த்தேன். அவ்வளவும் கடந்துபோன பழைய சம்பவங்களின் கனவு. ரயில்வே ஸ்டேஷனில் படுத்திருந்ததின் பலன்!

தூரத்தில் ரயில் வந்து கொண்டிருக்கிறது. என் அருகே என் கணவர் இருக்கிறார். அவருக்குப் பக்கத்தில் எங்கள் கண் மணியும் சிறு மரத் தொட்டிலும் கிடக்கிறது. எனக்குச் சிரிப்பாய் வந்தது.

"செத்தாச் சாவுன்னு அன்னைக்கு ரயில்வே லைனிலே வந்து தேடாம விருந்தா எவ்வளவு தொல்லை இல்லாம விருக்கும்?"

"இப்போ தொட்டிலும் குழந்தையுமா குல தெய்வத்துக்குப் பூஜை போடப் போக முடியுமா?"

"அந்த மருமகப் பயல் ராஜாமணி மட்டும் மூர்ச்சை தெளிஞ்சு, 'மாமா, மாமா! கன்னுக்குட்டி தான் என்னைக் கிணத்திலே தள்ளுச்சு; அத்தை விழுந்து என்னைத் தூக்கிறு! எங்கே அத்தை?' என்று கேட்டிராவிட்டால், உன்னை உயிரோடே நான் பார்த்திருக்க முடியுமா?" என்றார் அவர்.

பக்கத்திலே சிறு தொட்டில். அதனருகே துணியில் கிடந்தது என் ஆசைக் கனி. அது அழுதது. இருவரும் அதைப் பார்த்தோம். "இவனை ராஜாமணிக்குக் கொடுத்து உங்கள் தங்கையைப் பழி வாங்கப் போகிறேன்!" என்று சொல்லி நான் சிரித்தேன்.

"உன் பெண்ணை ராஜாமணி கட்டிக் கொண்டால்தானே?" என்று அவர் போட்டார் ஒரு போடு!

ரயில் வந்து நின்றது. குழந்தை, குழந்தைக்கு வேண்டிக்கொண்ட வர்ணத் தொட்டில், கூஜா, நான் எல்லோரையும் ரயிலில் தள்ளிவிட்டுத் தானும் ஏறிக் கொண்டார்.

அடுத்த ஸ்டேஷனில் எங்களோடு குல தெய்வத்தை வணங்குவதற்கு வர இருந்த என் மருமகனையும் நாத்தியையும் ஏற்றிக் கொள்வதற்காக ரயிலும் நகர்ந்தது.

# உங்களுக்கு ஆஸ்பிரின் தேவையான சமயத்தில் —



# Alasil

Aspirin with a Difference

சாப்பிடு

## வித்தியாசத்தைக் கவனியுங்கள்

விரைவாக அதிகமாகிக் கொண்டு வரும் "அலாஸில்" வில்லைகளின் உபயோகமானது, அநேக வருஷங்களாக வைத்தியர்களுக்கும் பல் வைத்தியர்களுக்கும் "அலாஸில்" வில்லைகள் புதிய அபிவிருத்தி செய்யப்பட்ட மாதிரியான ஆஸ்பிரின் என்று தெரிந்துள்ள விஷயத்தை பொதுஜனங்கள் நன்றாய் உணருகிறார்கள் என்பதைக் காட்டுகிறது.

ஆஸ்பிரினுக்கு பிரதியாக இருப்பதோடு மட்டுமல்லாமல் "அலாஸில்" வில்லைகளில் சுத்தமான ஆஸ்பிரினோடு ஒரு பாகம் அலேசகால என்ற சக்தியுள்ள அன்று சயத்திருத்திய உபாமனகாரியும் புளிப்பு மாற்றுனும் சேர்ந்து இருப்பதால் அவைகள் விசேஷ முன்னேற்றத்தை உடையனவாயிருக்கின்றன.

இப்படியாக "அலாஸில்" வில்லைகள் மற்றும் முக்கியமான விசேஷ அநுகூலங்களுடன் வலியை தொடியில் போக்கடிக்க வல்ல ஆஸ்பிரினின் குண விசேஷத்தையும் உடையனவாய் இருக்கின்றன. சாஸ்திரிய முறைப்படி செய்யப்பட்டிருப்பதால் "அலாஸில்" வில்லைகள் — அதிக அநுகூலங்கள் உள்ள பெரிய வில்லைகள் — யாதொரு கெடுதியும் அதிருப்தியான பிற்பயனும் விளைவிக்காமல், நிச்சயமாகவும் சீக்கிரமாகவும் வலியிலிருந்து பரிகாரம் கொடுக்கின்றன. அவைகள் வயிற்றையும் ஜீரண காரியத்தையும் தேற்றி சரிவரச் செய்து அதிக புளிப்பு இருந்தால் அகற்றி விடுகின்றன.

புதிய அபிவிருத்தி செய்யப்பட்ட மாதிரியான ஆஸ்பிரின்.




இவைகளுக்கு "அலாஸில்" சாப்பிடுங்கள்: தலைவலி, ஜலதோஷம், பல்வலி நரம்புவலி, வாத வலி, இடுப்புவலி, இடுப்புச் சந்துவாதம், விட்டு விட்டுவரும் சகல வலிகள், தூக்கமின்மை, புளிப்பினால் ஏற்படும் ஜீரணக்கோளாறுகள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் ஸ்டோர்களிலும் கிடைக்கும்.

விநியோகஸ்தர்கள்:
ரெனாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி நெ. 1205, மதராஸ்
கொழும்பு, கராச்சி, கல்கத்தாவிலும் உள்ளன




# திருட்டுச்

மங்களபுரி அரசனுடைய அரண்மனை அன்று அல்லோல கல்லோலப் பட்டது. காரணம், அரசியினுடைய முத்து மாலையும் இன்னும் சில நகைகளும் காணாமற் போனதுதான். சில நாட்களாகவே அரண்மனையிலிருந்து விலையுயர்ந்த பொருள்கள் திடீர், திடீரென்று மறைந்து கொண்டிருந்தன. அரசனுக்கு இது வியப்பை யளித்து வந்தது. இப்பொழுது அரசியினுடைய நகைகள் காணாமற் போன விஷயம் காதுக்கு எட்டியவுடன் அரசனுடைய கண்கள் கோபத்தால் சிவந்தன. மீசை துடித்தது. திருடனைக் கண்டு பிடித்து அவனுக்குக் கடுமையான தண்டனை அளிக்கும் பொருட்டு மந்திரி மதியூகியாரைக் கலந்து ஆலோசித்தான்.

அன்று மாலை மதியூகியார் தம்முடன் ஒரு பெரியவரை அழைத்து வந்தார். அவர் பெரிய மேதாவி என்றும், எப்பேர்ப்பட்ட சிக்கலான விஷயத்தையும் ஒரு நொடியில் தீர்த்து விடுவாரென்றும் அரசனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

அரசன் மகிழ்ச்சியுடன் அவரை வரவேற்று அரண்மனையில் நடந்து வந்த திருட்டுக்களைப் பற்றிக் கூறினான். ஒரு நிமிஷம் யோசித்துவிட்டுப் பெரியவர் பேசலானார்: "அரசே, இந்தத் திருட்டுக்குக் காரண பூதர்கள் அரண்மனையிலேயே இருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. திருடனைக் கண்டு பிடிப்பதற்கு ஓர் உபாயம் இருக்கிறது" என்று கூறிவிட்டு, அரசனுடைய காதோடு ரகசியமாகச் சில வார்த்தைகளைக் கூறினார். அரசனும் அதை ஆமோதித்தான்.

அரசனுடைய ஆணையின் பேரில் உடனே வேலைக்காரர்கள் யாவரும் சபைக்குத் தருவிக்கப் பட்டனர். ஒவ்வொருவரிடமும் ஒரு கழியைக் கொடுத்து, அதை வீட்டுக்கு எடுத்துக்

# சேவகன்

என். ஸ்ரீனிவாசன்

கொண்டு போய் மறு நாள் சபைக்குக் கொண்டு வருமாறு பெரியவர் கூறினார். தாம் ஒரு மந்திரவாதி என்றும், யார் உண்மைத் திருடனோ அவனிடமிருக்கும் தடி தம்முடைய மந்திர சக்தியால் அன்றிரவு ஓர் அடி நீண்டு விடும் என்றும் அதன் மூலம் தாம் திருடனைக் கண்டு பிடிக்கப் போவதாகவும் பெரியவர் பகிரங்கமாகக் கூறினார்.

மறு நாள் காலையில் சபை கூடியதும், எல்லோருடைய தடிகளையும் பார்வையிட்டுக் கொண்டு வந்த பெரியவர், ஓர் இடத்தில் சற்று நின்றார். காரணம், அங்கே நின்றிருந்தவன் தடி முனையில் கொஞ்சம் வெட்டப்பட்டிருந்ததுதான்!

அந்தத் தடிக்கு உரியவன்தான் நிஜத் திருடனாதலால், எங்கே தன்னிடம் கொடுக்கப்பட்டிருந்த தடி இரவு நீண்டு விடுமோ என்று அஞ்சி, முன்னதாகவே அவன் தடியை ஓர் அடி நீளம் வெட்டிக் குறைத்துக் கொண்டிருந்தான்!

பெரியவருடைய சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று. யாவருக்கும் விஷயம் விளங்கியது. அதற்குப் பிறகு திருட்டுச் சேவகன் குற்றத்தை ஒப்புக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை.

அரசன் திருடனுக்குத் தக்க தண்டனை அளித்தான். பெரியவருடைய அறிவையும் வெகுவாக மெச்சி, அவரைத் தன்னுடைய சபையிலேயே தனக்கு ஆலோசகராக இருக்குமாறு வேண்டிக் கொண்டான். அவரும் அதற்குச் சம்மதித்து அரசனுடன் தங்கினார்.

அதற்குப் பிறகு அரண்மனையில் யாரும் எதையுமே திருடவில்லை.






யாதானாலும்
அதற்கு ஏற்றது



# டன்லப்




DK 295TM

# நடை அலங்காரம்

சுந்தா

பஞ்சகச்சம் கட்டிக் கொண்டு பட்டாளத்து நடை நடந்தால் நன்றாயிருக்குமா? பட்டாளத்து உடை அணிந்து வைதிக நடை நடந்தால் நன்றாயிருக்குமா? பஞ்சகச்சம் கட்டிக் கொண்டவர், மெதுவாக சாதுவாகத்தான் நடக்க வேண்டும். பட்டாளத்து உடை அணிந்தவர், விறைப்பாக 'லெப்ட் ரைட்' போட்டுத்தான் நடக்க வேண்டும். உடைக்கு ஏற்ற நடை வேண்டும்.

உடை வகைகள் நம் நாட்டில்தான் அதிகம்; ஆகவே நடை வகைகளும் அதிகம். தலைநகரான டெல்லியிலே பல மாகாணங்களைச் சேர்ந்தவரும் பல தேசங்களைச் சேர்ந்தவரும் அவரவர் இனத்து உடை அணிந்து நடமாடுகிறார்கள். 'கனாட் சர்க்கஸ்' என்று சொல்லப்படும் நவநாகரிக அங்காடி வட்டத்தில், உடை வகைகளையும் நடை வகைகளையும் காண்பதே ஒரு தனி அனுபவம்.

ஓ! நீங்கள் இந்த ஊருக்குப் புதிதல்லவா? என்கூட வாருங்கள் காட்டுகிறேன், உடை அலங்காரத்தையும் நடை அலங்காரத்தையும். இதுதான் சரியான சமயம். அந்தி மயங்கி விட்டது. மின்சார விளக்குகள் ஜொலிக்க ஆரம்பித்து விட்டன. ஒரே ஒரு முறை வட்டம் சுற்றி வந்தால் போதும்.

இதோ நேருஜி மாதிரி உடை அணிந்து ஒருவர் வருகிறார், பாருங்கள். சல்வாருக்கும் ஷெர்வாணிக்கும் ஏற்ற வீர நடையைப் பாருங்கள் ...... திரும்பிப் பார்க்க வேண்டாம். பாவாடை அழகி தாண்டிச் சென்று விடப் போகிறாள்! பாவாடையும் தாவணியும் படபடவென, என்ன ஒய்யாரமாக நடக்கிறாள், பார்த்தீர்களா?...... இதற்குத்தான் 'ஸ்டைல் நடை' என்று சொல்வது. மேல் நாட்டு உடைக்கு இந்த நடை எவ்வளவு பொருத்தமாய் இருக்கிறது பாருங்கள்... இதுதான் குதிகால் ஜோடு நடை. 'ஸ்கர்ட்' உடைக்குத் தான் இந்த நடை பொருத்தும். அந்த நிலையிலேப் பாருங்கள். இல்லை, மயிலென்று மாத்திரம் சொன்னது தவறு. உடையைப் பார்த்தால் மயில்; நடையைப் பார்த்தாலோ அன்னம். ஆகவே, இரண்டும் சேர்ந்த மயிலன்னம், அல்லது அன்ன மயில் என்றுதான் சொல்ல வேண்டும்...... வருகிறாய்யா, திப்பு சுல்தான்! ஆடம்பர உடையணிந்து அட்டகாசமாய் நடப்பதைப் பாருங்களேன். நாம் ஒரு பக்கம் விலகிக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் நம்மை வீசித் தள்ளி விடுவார்...... சாது உடைக்கு ஏற்ற சாது நடையைப் பாருங்கள்; துக்காராமோ துளசிதாசரோ என்று சொல்லும்படியாக இருக்கிறாரா, இல்லையா? போங்கள், ஜெய்ஹிந்த்! நேதாஜி மாதிரியே உடை அணிந்து நடை போடுகிறார், பாருங்கள்......ஹா! இந்த நடையை என்னென்று சொல்வது! உச்சந் தலை முதல் புறங்கால் வரை பர்தா போட்டு மூடிக் கொண்டிருந்தாலும், நடையிலே மனதைப் பற்றி இழுக்கும் கொஞ்சலைப் பார்த்தீர்களா? நூர்ஜஹானும் மும்தாஜ்மஹாலும் நடந்திருப்பார்கள். பளிங்கு ஜலுஜுக்களில் பைஜாமா அணிந்த பாஞ்சால அழகி, 'ஜிலுக் ஜிலுக்' என்ற ஒலியுடன் மேடைக்குச் செல்லும் நாட்டியக்காரி போல் நடக்கிறாள், பாருங்கள். இது யார். இவன்? சராயும் ஜிப்பாவும் 'தொள தொள' வென்று போட்டுக் கொண்டு கோமாளி மாதிரியல்லவா நடக்கிறான்!......பேஷ்! காதலர் ஜோடி நடைக்குச் சரியான உதாரணம். வர்ணப் பட்டுச் சேலை உடுத்தியிருக்கும் ஜோரில், தன்னைப் போல அழகி வேறில்லை என்ற கர்வத்துடனும் தன் கையை சுந்தர வாலிபன் ஒருவன் பற்றி வருகிறான் என்ற குதூகலத்துடனும் அவன் நடக்கிறான் அவளோடு. தன் காருக்கு உடையிலும் தன் காதலியின் அழகிலும் ஒருங்கே



சொக்கிப் போய் நடக்கிறான்... பாருங்கள், இது அசல் தமிழ்நாட்டு நங்கையின் நடை. தழையத் தழைய சேலை புரள, மேலாக்கு மயில் தோகையென விரிந்தாட, காலடிச் சிந்து போல நடந்து வருகிறாள், பாருங்கள். அவள் பக்கத்தில் நட்டநடை வேட்டிக்காரன் அங்கவஸ்திரத்தை மாலையாகப் போட்டுக்கொண்டு நடப்பது எப்படி இருக்கிறது?...அதோ, மார்பகலமும் புஜபலமும் தெரியும்படியாகப் பிடிப்பான சொக்காய் அணிந்து பயில்வான் நடை போடுகிறான்... பாவம் கிழவன், கோணல் மாணலாக உடையணிந்து தள்ளாடித் தள்ளாடி நடக்கிறான். மிஞ்சியுள்ள வாழ்நாளை அடிமேல் அடி வைத்து அளந்து பார்க்கிறான். இதே கிழவன் வாலிபப் பருவத்தில், எத்தனையோ விதமான உசித ஆடைகள் அணிந்து, மிடுக்காகவும் துடுக்காகவும் நடந்திருப்பான். இப்போதோ ஆடைகளில் கவனமில்லை; நடப்பதற்கோ ஊன்றுகோல் வேண்டியிருக்கிறது.

வட்டம் சுற்றியது போதும். கொஞ்சம் காலாற அந்தப் பெஞ்சுமேல் உட்காரலாம் வாருங்கள்.

உங்கள் முகத்தைப் பார்த்தால், உடைக்கும் நடைக்கும் உள்ள பொருத்தத்தை முழுதும் ஒப்புக் கொள்ள வில்லைபோல் தோன்றுகிறதே, அப்படித்தானா? அப்படியென்றாலும் உங்களை ஒப்புக்கொள்ளும்படி வைக்கும் பொருட்டு நான் தர்க்க வாதம் ஏதும் செய்யப் போவதில்லை. கண்டதையும் கவனித்ததையும் எடுத்துச் சொல்கிறேன்; அவ்வளவுதான்.

இது இருக்கட்டும்; ஒவ்வொருவருக்கும் தனி நடை ஒன்று உண்டு என்பதையாவது பூரணமாய் ஒப்புக் கொள்வீர்களா? தூரத்தில் வரும் நண்பர் ஒருவரை, நடையைப் பார்த்தே அடையாளம் கண்டு கொள்ள முடிகிறதா, இல்லையா? காலடிச் சத்தத்தைக் கேட்டே, வருவது இன்னார் என்று குருடர்கள் சொல்லி விடுகிறார்களே, எதனால்? ஒவ்வொருவருக்கும் தனி நடை இருப்பதனால்தான்.



சிலர் எதையோ கண்டு மிரண்டவர்கள்போல் நடக்கிறார்கள். இன்னும் சிலர், எதையோ தேடித் தேடித் திரிவது போல் நடக்கிறார்கள். மற்றும் சிலர், பட்டணமே தீப்பற்றி எரிந்தாலும் கவலையில்லை என்று தெரிவிப்பது போல் நிதானமாக நடை போடுகிறார்கள். குதிரை நடை, கரடி நடை, சிம்ம நடை, யானை நடை, ஒட்டக நடை, முயல் நடை, மார்ஜால நடை, மயூர நடை, வாத்து நடை, ஆலி நடை, பொம்மை நடை என்பதாக, நடைகளைப் பலவிதமாக வர்ணிக்கலாம்.

ஒருவருடைய தனி நடையில் மன நிலை மாறுதல் செய்கிறது. எதையேனும் ஆவலுடன் எதிர்பார்க்கிறவன், பரபரப்பாக நடப்பான். துக்கப்பட்டிருப்பவன் சோர்ந்து பின்னிப் பின்னி நடப்பான். சந்தோஷம் கொண்டிருப்பவன், குதித்துக் குதித்து நடப்பான். பெருமைக்குப் பாத்திரமானவன், ஜம்பமாகக் கால் மாற்றி நடப்பான்.

இதுவரை சொன்ன நடை வகைகளையெல்லாம் இலக்கியத்திலும் காணலாம். ஒவ்வொரு ஆசிரியருக்கும் ஒவ்வொரு தனி நடை. அதில், ஆசிரியரின் வயசுக்கு ஏற்ற மாறுதல்; விஷயத்துக்கேற்ற மாறுதல்; உணர்ச்சிக்கேற்ற மாறுதல்.

பேனா நடை வகைகளைச் சில உதாரணங்களைக் கொண்டு எடுத்துக் காட்டலாம் என்றால் பயமாயிருக்கிறது. ஓர் ஆசிரியரின் நடையை 'கஜ நடை' என்று வர்ணிக்கிறேன் என்று வைத்துக் கொள்வோம். அவர் சந்தோஷப்பட்டு என்னை வாழ்த்துவார் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் நான் அதோடு நின்றுவிட முடியுமா? இன்னொரு ஆசிரியரின் நடையை, 'எருமை நடை' என்று வர்ணிக்க வேண்டி வரலாம். அப்போது அந்த ஆசிரியர் என்னைச் சும்மா விட்டு வைப்பாரா? ஆகவே, எதெது எந்தெந்த நடை என்பதை நீங்களே உங்கள் சொந்த ஆராய்ச்சியின் மூலம் கண்டு கொள்ளலாம்.

கவிதையிலும் சரி, வசனத்திலும் சரி, அங்கங்கே இளங்கன்றின் துள்ளல் நடையைக் காணலாம். மத்த கஜத்தின் பெருமித நடையைக் காணலாம். ஊர்வசியின் மோகன நடையைக் காணலாம். சித்திரங்களிலும் சிற்பங்களிலும் உயிர் பெற்று உலாவும் நடையைக் காணலாம். வெள்ளைக் கலை யுடுத்தி வெள்ளைப் பணி பூண்ட வாணியின் நடையையே காணலாம்.

# சந்திர ஹாரம்

ஆசிரியர்: பிரேம்சந்த் | மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

— எட்டாம் அத்தியாயம் —

## கவலை தீரவில்லை!

பொழுது விடிந்ததும் தயாநாதபாபு கைகளில் நகைகளுடன் கணக்கைத் தீர்க்கும் பொருட்டு, நகைக் கடையை அடைந்தார். கணக்குப் பார்த்ததில் அவர் கடைக்காரனுக்கு ஆயிரத்து நூற்றைம்பது ரூபாய் கொடுக்க வேண்டும் என்று தெரியவந்தது. ஆனால் கடைக்காரன் அந்த ஆயிரத்து நூற்றைம்பது ரூபாயை மட்டும் பெற்றுக் கொண்டு திருப்தியடைபவனாகத் தோன்றவில்லை. 'விற்ற சாமான்கள் திருப்பி எடுத்துக் கொள்ளப்பட மாட்டா' என்று 'காஷ் பில்'லுக்கு அடியிலேயேதான் இந்த நாட்களில் குறிப்பிட்டு விடுகிறார்களே! அப்படியிருக்கும் பொழுது, விற்ற விலைக்கே நகைகளைத் திருப்பி எடுத்துக் கொள்ள எந்தக் கடைக்காரனாவது சம்மதிப்பானா? வட்டிக்கு என்று முன்னாலேயே பேசி வாங்கியிருந்தால், அது வேறு விஷயம். ஆனால் இந்த நகைகளோ விலைக்கு வாங்கிடவை. கடைக்காரன் வியாபாரத்தின் சித்தாந்தங்களையும், நியாயத்தையும் தயாநாதபாபுவுக்கு எடுத்துச் சொல்ல ஆரம்பித்து விட்டான். "பில் போட்ட பிறகு எவனாவது நகைகளைத் திருப்பி வாங்கிக் கொள்ளுவானா? கொண்டு வந்து கொடுப்பதுதான் உங்களைப் போன்றவர்களுக்கு அழகா? நீங்களே சொல்லுங்கள், நியாயத்தை!" என்றெல்லாம் அவரைப் பேச்சில் மடக்கி, வாய் திறக்காமல் அடித்து விட்டான்.

அவன் சொல்வதற்கெல்லாம் அவரால் தலையசைத்து 'ஆமாம், ஆமாம்' போட முடிந்ததே தவிர வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்ல முடியவில்லை. அவரோ ஒரு சாதாரணமான கோர்ட்டுக் குமாஸ்தா! அவனோ மலை விழுங்கி மகாதேவன்! அவனிடம் அவர் பேசி ஜயிக்க முடியுமா, என்ன? கொடுக்க வேண்டிய தொகைக்குப் பதிலாக, சுமார் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் பெறுமானமுள்ள நகைகள் அவனுடைய கைக்குச் சென்று விட்டன. அதோடு நின்றிருந்தால் கூடத் தேவலையே! 'இன்னும் ஐம்பது ரூபாய் அவர் பாக்கி தரவேண்டும்' என்று கணக்கு வேறு அவனுடைய பேரேட்டில் ஏறியிருந்தது. எப்படியோ தன்னை ஒருவாறாக விடுவித்துக் கொண்டு தயாநாதபாபு வீடு வந்து சேர்ந்தார்.

இந்த விஷயத்தில் தந்தைக்கும் தனயனுக்கும் அடிக்கடி வாக்கு வாதம் கூட எழுவது உண்டு. ஒருவர்மீது ஒருவர் குற்றம் சுமத்துவார்கள். வரவரப் பேச்சுத் தடித்து, தந்தைக்கும் தனயனுக்கும் சில தினங்கள் சேர்ந்தாற்போலப் பேச்சு வார்த்தையேகூட நின்று விடும். ஆனால் அந்தத் திருட்டுப் போன விஷயம் மட்டும் பரம ரகசியமாகவே வைக்கப்பட்டிருந்தது. போலீஸில் எழுதி வைத்தால் தங்கள் 'குட்டு' வெளிப்பட்டு விடுமே என்று இருவருக்கும் பயம். ஆகை

யால் பத்மாவிடம் "நகை திருட்டுப் போனது, போனதுதான்! இனிமேல் அது எங்கே கிடைக்கப் போகிறது? போலீஸில் எழுதி வைத்து வீண் தொல்லைக்கு ஆளாவானேன்?" என்று சொல்லி அவளைச் சமாதானப்படுத்த முயன்றார்கள். அவளும், "கெட்டுப் போன நகை கிடைக்காது என்றால், வீணாகப் போலீஸுக்கு எழுதி வைப்பானேன்!" என்று தன் மனத்தைத் தேற்றிக் கொண்டாள்.

பத்மாவுக்கு நகைகளிடம் ஏற்பட்டிருந்த ஆசையைப் போல, உலகத்தில் உள்ள வேறு எந்தப் பொருளிடமும் ஏற்படவில்லை. அந்த நகை ஆசை, அவள் அறியாக் குழந்தையாக இருந்த போதே அவளுடைய மனதில் ஊறி விட்டது. அவளுக்கு மூன்று வயதாயிருக்கும் பொழுது பொன் வளையல்கள் செய்து போட்டார்கள். அவளுடைய பாட்டி சாதம் ஊட்டும் பொழுதெல்லாம் நகைப் பேச்சாகவேதான் பேசிவந்தாள். "உனக்கு வாய்க்கப்போகும் கணவன் அழகழகான நகைகள் எல்லாம் செய்து போடுவான்! நீ மினுக்கி மினுக்கிக் கொண்டு நடப்பாய்! அந்தக் காலத்தில் எங்களை யெல்லாம் தலை நிமிர்ந்துகூட நீ பார்க்க மாட்டாய்!" என்பாள் பாட்டி.

"ஏன் பாட்டி, பவுன் நகை செய்து போடுவானா, அல்லது வெள்ளி நகை செய்து போடுவானா?" என்று கேட்பாள் பத்மா.

"பவுன் நகைதான் செய்து போடுவான். வெள்ளி நகை எதற்காகச் செய்து போடப் போகிறான்? அப்படி வெள்ளி நகைதான் செய்து போட்டான் என்றால் அவனுடைய முகத்திலேயே விட்டெறிந்து விடு!" என்பாள் பாட்டி.

மானவி அவளுக்குக் கோபம் உண்டு பண்ண வேண்டும் என்பதற்காக, "அவளுக்குப் பவுன் எங்கே கிடைக்கப்போகிறது? எல்லாம் வெள்ளியில்தான் செய்து போடுவான்!" என்பாள்.



இதைக் கேட்டதும் பத்மாவுக்கு அழுகை பொத்துக்கொண்டு வந்து விடும். இதைப் பார்த்துப் பாட்டி, மானவி, வீட்டு வேலைக்காரிகள், பக்கத்து வீட்டார்கள், தின தயாள்பாபு எல்லாருமே சிரிப்பார்கள். இம்மாதிரி பத்மாவிடம் நகைப் பேச்சை எடுத்துப் பேசி அவளை அழவிட்டு வேடிக்கை பார்ப்பதுதான் அவர்களுக்கெல்லாம் பொழுது போக்காக இருந்து வந்தது.

பத்மா இன்னும் சற்றுப் பெரியவள் ஆனதும், மரப்பாச்சி கல்யாணம் செய்து வைக்க ஆரம்பித்துவிட்டாள். பிள்ளை வீட்டிலிருந்து பெண் வீட்டுக்குப் பரிசம் அனுப்புவாள். அந்தப் பரிச நகைகளைக் கொண்டு பெண்ணுக்கு அலங்காரம் செய்வாள். கல்யாணம் ஆன பிறகு பெண்ணைப் பல்லக்கில் உட்கார வைத்து, பு

ஷன் வீட்டுக்கு விடைகொடுத்தனுப்புவாள். மரப்பாச்சி தம்பதிகள் குடும்பம் நடத்த ஆரம்பித்துவிடுவார்கள். பெண் மரப்பாச்சி ஆண் மரப்பாச்சியிடம், 'நகைகள் செய்து போட்டால்தான் ஆச்சு!' என்று பிடிவாதம் பிடிக்கும். கோபித்துக்கொண்டு ஒரு மூலையில் போய் உட்கார்ந்துவிடும். ஆண் மரப்பாச்சி எங்கிருந்தாவது நகைகள் கொண்டு வந்து தன் மனைவிக்குப் போட்ட பிறகு தான் வீடு வீடாகும். இந்தமாதிரி அவள் விளையாடும் நாட்களில்தான் வளையல் வியாபாரி ஒருவன் வந்து அவளுக்குப் போலிச் சந்திரஹாரம் ஒன்றைக் கொடுத்துச் சென்றான். அந்தச் சந்திர ஹாரத்தைத் தான் அவள் இன்றும் வெகு ஜாக்கிரதையாக வைத்திருக்கிறாளே!

இன்னும் சற்றுப் பெரியவள் ஆனதும், அவள் வயது வந்த பெரியவர்களின் மத்தியில் உட்கார்ந்துகொண்டு, நகைப் பேச்சைக் கேட்டு ரஸிக்கலானாள். பெண்களுக்கு இந்தப் பேச்சை விட்டால் பேசுவதற்கு வேறு பேச்சு ஏது? 'யார் யார் என்ன என்ன நகைகள் செய்து போட்டுக் கொண்டிருக்கிறார்கள்? என்ன என்ன விலைக்கு வாங்கினார்கள்? அவள் போட்டுக் கொண்டிருப்பது கெட்டிக் காப்பா, உள்ளே கட்டை கொடுத்த காப்பா? அது கல் இழைத்த கங்கணமா, அல்லது சாதாரண கங்கணம்தானா? எந்த எந்தப் பெண்ணுக்குக் கல்யாணத்தில் என்ன என்ன நகைகள் செய்து போட்டார்கள்?' என்பது போன்ற விஷயங்கள்தானே மகத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பட்டுப் பெண்களின் கும்பலில் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும்? அவர்களுக்கு இதைவிட மேலான—ருசிகரமான பேச்சு வேறு ஏது?

இந்தமாதிரி நகைப் பேச்சையே பேசிக் காலம் கழிக்கும் சமூகத்தில் பிறந்து வளர்ந்த அவளுக்கு நகைகள் மீது ஆசை ஏற்படுவது இயற்கைதானே! நகைகள் திருட்டுப் போய் ஒரு மாதத்துக்குமேல் ஆகிவிட்டது. அவள் அதே ஏக்கத்தில் படுத்த படுக்கையாக இருக்கலானாள். காலாகாலத்தில் சரிவரச் சாப்பிடுவதும் இல்லை. பிறருடன் முகம் கொடுத்துப் பேசுவதும் இல்லை. 'தான் உண்டு, தன் படுக்கை உண்டு' என்றிருந்தாளே தவிர, இந்த உலக நினைவிலேயே அவள் இல்லை. இதைப் பார்த்து வீட்டில் உள்ளவர்கள் அவளை எவ்வளவோ தேற்றிப் பார்த்தனர். பக்கத்து வீட்டுப் பெண்மணிகள் வேறு சொல்லிப் பார்த்தனர். அவளுடைய தந்தை தீன தயாள் பாபுவே நேரில் வந்து தேற்றி விட்டுக் கூடப் போனார். யார் எவ்வளவு தேற்றியும் அவளுடைய மனம் நிம்மதியடையவில்லை. யாருடைய வார்த்தையிலாவது அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டால்தானே, அதற்கு? இப்பொழுதெல்லாம் ரமாநாத்தைக்கூட அவள் அவ்வளவாக லட்சியம் செய்வதில்லை. "இந்த வீட்டில் யாராவது 'நான் ஒருத்தியிருக்கிறேன்' என்று எண்ணினால்தானே! எல்லாரும் என் உயிருக்கே உலை வைக்கக் கூடத் தயாராயிருக்கிறார்கள்! இல்லாவிட்டால் இவ்வளவு பணம்—காசைக் கையில் வைத்துக்கொண்டிருப்பவர்கள் எனக்கு நகைகளைச் செய்து போட்டிருக்க மாட்டார்களா?" என்று அவள் எண்ணமிடலானாள்.

பொதுவாக நாம் யாரிடம் அதிகம் பிரியம் செலுத்துகிறோமோ, அவர்களைத் தானே உரிமையுடன் கோபித்துக் கொள்ள



வும் செய்கிறோம். அதேபோல் பத்மாவுக்கு சமாசாரத்தின் மேல்தான் கோபம் கோபமாக வந்தது. "அவர்களைச் சொல்லிப் பிரயோசனம் இல்லை. இவர் தம் அப்பா — அம்மாவிடம் 'அதெல்லாம் முடியாது. நகைகள் செய்து போட்டுத்தான் ஆக வேண்டும்' என்று பிடிவாதம் பிடித்தாரானால், அவர்கள் 'முடியாது' என்று சொல்லிவிடப் போகிறார்களா, என்ன? நிஜமாகவே இவருக்கு என்னிடம் அன்பு இருந்தால் இப்படிப் 'பிள்ளையார்' மாதிரி உட்கார்ந்திருப்பாரா? நகைகள் எல்லாம் செய்து முடிகிற வரைக்கும் இவருக்குத் தூங்கத்தான் மனம் வந்திருக்குமா? 'கண்டால் ஒரு விதம், காணவிட்டால் ஒரு விதம்' என்பார்களே, அப்படி நம்மைப் பார்க்கும் பொழுதெல்லாம் மட்டும் தேனொழுகப் பேசி விடுகிறார். காரியம் என்று வரும்பொழுது அப்பா — அம்மாவின் கட்சியில் சேர்ந்து கொண்டு விடுகிறார்!" என்றெல்லாம் எண்ணி அவள் மனதைப் போட்டு உழற்றிக் கொள்ளுவாள்.

அவள் சமாசாரத்திடம் சுமுகமாக வார்த்தையாடுவதே யில்லை. அவன் ஏதாவது கேட்டால் எரிந்து விழுந்து கொண்டுதான் பதில் சொல்லுவாள். பாவம், சமாசாரத் பேச வகை யறியாமல் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டு அப்பால் நகர்ந்து விடுவான். எப்பொழுது பார்த்தாலும் வதனத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடக் கட்டவிழ்த்து விடப்பட்ட காளையைப்போல் ஊர் சுற்றிக் கொண்டிருந்த அவனைக் கவலையும் வருத்தமும் கட்டிப் போட்டு விட்டன. உத்தியோகத்துக்காக அவன் அலையாத இடம் இல்லை. ஆனால் எங்கேயாவது உத்தியோகம் கிடைத்தால்தானே!

இதை எண்ணும்பொழுது அவனுக்குத் தன் தந்தைமீது கோபம் கோபமாக வரும். 'அவர் மனம் வைத்தால் காலே மாதத்தில் இந்தக் கடனை யெல்லாம் தீர்த்திருக்க முடியாதா? அவருக்கு யார் எப்படிப் போனால் என்ன? தான் பிடித்த பிடிவாதத்தை விடவே மாட்டார்!' என்ற எண்ணம் எழும்பொழுது, அவனுடைய உள்ளத்தில் புரட்சித் தீ கொழுந்து விட்டு எரிய ஆரம்பிக்கும். பத்மாவின் வாடிப் போன முகத்தைப் பார்க்கும் பொழுது அவனுடைய உள்ளக் கிடக்கையிலிருந்து நீண்டதொரு பெருமூச்சு எழும். அந்த இன்பம் தரும் காதல் கனவு இவ்வளவு சீக்கிரமா பங்கம் ஆகவேண்டும்! அந்த நாள் மறுபடியும் திரும்பி வாராதா? மூவாயிரம் ரூபாய் பெறுமான மூன்று நகைகள் செய்து போடுவது எப்படி? அவன் வேலைக்கே போனாலும் அவனுக்கு என்ன அவ்வளவு பெரிய வேலை கிடைத்துவிடப் போகிறது? யார் அள்ளிக் கொடுத்து விடப் போகிறார்கள்? மூன்று பிறவி எடுத்துச் சம்பாதித்தாலும் அந்த மூவாயிரம் ரூபாய் சேராதே! 'திடுதிப்'பென்று பெரிய பணக்காரன் ஆவதற்கு ஏதாவது வழி பிறாதா?'—என்ற சிந்தனையில் அவன் ஆழ்ந்தான்.

அவன் பெயருக்கு ஏதாவது 'லாட்டரிச் சீட்டு' விழுந்தால்தான் உண்டு. அப்படி லாட்டரிச் சீட்டு விழுந்துவிட்டால் அவளுக்குப் 'போதும், போதும்' என்கிற வரையில் அவன் நகைகள் செய்து போட்டு விடுவான். கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிரித்துக் கொண்டு கொடுக்கும் என்கிறார்களே? ஒரு வேளை அப்படிக் கொடுத்தால் அவன் அவளுக்குக் கல் இழைத்த சந்திரஹாரம் செய்து போடத் தயார்! ஆனால் அப்படி எங்கே நடக்கப் போகிறது? — இப்படி யெல்லாம் அவனுடைய மூளை செய்த வேலையில், அவனுக்குக் கள்ள நோட்டு அச்சடிக்கும் வித்தை தெரிந்திருந்தால், கட்டாயம் அச்சடித்து அதைச் செல்லவைக்க முயற்சித்திருப்பான்!

ஒரு நாள் காலை அவன் எங்கெல்லாமோ வேலைக்காகச் சுற்றி அலைந்தான். சதுரங்கம் ஆடுவதின் காரணமாக அவனுக்கு எவ்வளவோ பெரிய மனிதர்களுடன் நெருங்கிப் பழகச் சந்தர்ப்பம் கிட்டியிருந்தது. ஆனால் தன்னுடைய குடும்ப நிலைமையை அவர்களிடம் சொல்லி ஒரு வேலை தேடிக் கொள்ள அவனுக்கு அச்சமாகவும் சங்கோசமாகவும் இருந்தது. "பிறரிடம் 'உதவி' என்று கை நீட்டாமல் இருக்கும் வரையில்தான் மானமும் மரியாதையும். ஒரு தடவை 'உதவி' என்று கை நீட்டி விட்டால் போதும். அப்புறம் யாரும் 'ஏன்' என்றுகூடக் கேட்கமாட்டார்கள்" என்பதை அவன் நன்கு உணர்ந்திருந்தான். எந்தப் பெரிய மனிதனும் தானாகவே அவனுடைய நிலைமையைத் தெரிந்து கொண்டு, அவனுக்கு ஒரு வேலை செய்து வைக்க முன் வரவில்லை. அன்றும் காரியம் கைகூடாமற் போகவே, உடைந்த மனத்துடன் வீட்டுக்கு வந்தான்.

அவனுக்குத் தன் சிநேகிதர்கள் மீது கோபம் கோபமாக வந்தது. 'சிநேகிதன்

என்று சொல்லிக் கொண்டு சதுரங்கம் ஆடுவதற்கு மட்டும் வந்து விடுகிறார்கள், இந்தக் கவைக்கு உதவாத பயல்கள்! இனி மேல் சதுரங்கம் ஆடுவதற்கென்று வரட்டும்; எப்படித் திட்டி அனுப்புகிறேன், பார்!' என்று பல்லைக் கடித்துக் கொண்டான். ஆனால் அவன் மனதை இப்படி அலட்டிக் கொள்ளாமல் சிறிது ஆற அமர யோசித்துப் பார்ப்பானாகில், 'நண்பர்கள் மீது இப்படி அபாண்டமாகப் பழி சுமத்துவது தப்பு; பிழை யெல்லாம் தன் மீதுதான்' என்று தெரிந்து கொண்டிருப்பான். அவன் தன் வழக்கப்படி, சிநேகிதர்கள் எல்லாரிடத்திலும் தன் குடும்பத்தின் அந்தஸ்தை உயர்த்தியே கூறி வைத்திருந்தான். வீட்டின் உண்மை நிலைமையை அவன் யாரிடமும் கூறியதில்லை. அதனால் தான் இவ்வளவு பெரிய பெரிய இடத்துச் சிநேகிதம் கிட்டியிருந்தும் அவனுக்கு வேலை கிட்டவில்லை. இதுவரை அவன் தன் மனப் புழுக்கத்தை யாரிடமும் சொல்லாமல் மனதுக்குள்ளேயே அடக்கி வைத்திருந்தான். அது மூச்சுத் திணறலைப்போல அவனுக்கு மிகவும் சிரமத்தை யளித்தது. ஆகவே தன் அறைக்குள் போய்க் கன்னத்தில் கை வைத்துக்கொண்டு, முகத்தைத் தொங்கவிட்ட வண்ணம் உட்கார்ந்து விட்டான்.



நண்பர் :—என்னங்க, இது! 'போஸ்ட்மேன்' கூப்பிடறான், நீங்க வீட்டிலே 'இல்லே'ன்னு சொல்லச் சொல்றீங்களே? ஏதாவது மணியார்டர், இனியார்டர் வந்திருக்கப் போறது!

அவர் :—அதெல்லாம் ஒன்றும் இருக்காது. அவன் ஏதாவது கைமாத்து வாங்க வந்திருப்பான்!

அதே சமயம் ஞாகேசவரி அங்கே தண்ணீரைக் கொண்டு வந்து வைத்துவிட்டு, "இன்று பகல் பூராவும் எங்கே போய் விட்டாய்? போய்க் கைகால்களை அலம்பிக் கொண்டு வா!" என்றாள்.

சமா கையில் செம்பை எடுத்துக் கொண்டு எழுந்தான். அதற்குள் பத்மா அங்கே 'விடு விடு' என்று வந்து ஆத்திரத்துடன், "என்னை இப்பொழுதே என் பிறந்தகத்துக்குக் கொண்டுபோய் விட்டு விடுங்கள்!" என்றாள்.

சமாநாத் கையில் எடுத்த செம்பை அப்படியே கீழே வைத்துவிட்டு அயர்ந்து உட்கார்ந்துவிட்டான். விஷயம் புரியாமல் அவளையே உற்று நோக்கலானான்.

ஞாகேசவரி, "என் பத்மா, இப்படித் 'திடுதிப்'பென்று ஊருக்குப் போக வேண்டும் என்கிறாயே! இதென்ன கூத்து?" என்று கேட்டாள்.

"இந்த வீட்டில் நான் இருக்கிற சவரணைக்கு இந்தக் கேள்வி ஒன்றுதான் குறைச்சலா யிருந்தது! 'இருக்கிறாயா, அம்மா' என்று பரிவோடு கேட்க இந்த வீட்டில் யார் இருக்கிறார்கள்? இஷ்டப் பட்டபொழுது நான் போவேன்; வருவேன். இதையெல்லாம் கேட்கவேண்டியது அனாவசியம். சோறு, தண்ணீர் கிடைத்த பொழுது சாப்பிடவேண்டியது; பாக்கி வேளையில் அனாதைப் பிணத்தைப் போல உருண்டு கிடக்கவேண்டியது! இந்த மாதிரி வாழ்வானேன்? நானும் ஒரு மனுஷிதான். கட்டித் தீனிபோட்டு வளர்ப்பதற்கு, நான் மாடோ கன்றோ இல்லை! இந்த வீட்டிலே இனிமேல் நான் ஒரு நிமிஷங்கூட இருக்கப் போவதில்லை. யாராவது என்னைக் கொண்டு போய் விட்டால் சரி; இல்லையென்றால் நான் தனியாகவே போய்க் கொள்கிறேன். என்னைப் பிடித்துக் கொண்டுபோய் விழுங்கி விடுவதற்கு, வழியிலே என்ன கரடியா, புலியா? அப்படியே பிடித்துக் கொண்டு போய்விட்டால், 'தொலைந்தது சனியன்!' என்று நீங்கள் ஆனந்தமாக இருக்கலாம். நானும்தான் இந்த வீட்டில் இருந்து என்ன சுகத்தைக் கண்டுவிட்டேன்!" என்று ஆத்திரத்துடன் சொல்லிவிட்டு, பத்மா பதிலை எதிர்பாராமல் வெகு வேகமாக மாடிக்குப் போய்விட்டாள். (தொடரும்)




## கவனிக்கவில்லை!

வேகமாக வந்த ஒரு மோட்டார் ஒரு ஸ்திரீயைத் தள்ளிவிட்டு நிற்காமலே போய் விட்டது. அவள் அலறலைக் கேட்ட பலர் ஓடி வந்தார்கள்.

ஒருவர் :—என் அம்மா! கார் நம்பரைப் பார்த்தீர்களா? நம்பர் தெரிந்தால் 'ரிபோர்ட்' செய்யலாமே!

அந்த ஸ்திரீ :—நம்பரைப் பார்க்க எங்கே நேரம் இருந்தது? ஓட்டிக் கொண்டு வந்தது ஒரு பெண். அவள் வெள்ளை ஸாரியும் கறுப்பு ரவிக்கையும் போட்டுக் கொண்டிருந் தாள். கோண வகிடு எடுத்து இரு பக்கமும் பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள். காதில் வைரக் கம்மல், கழுத்தில் நெக்லேஸ், மூக்கில் பேஸரி, நெற்றியில் சாந்துப் பொட்டு......

—கே. நாராயணன்.

★

## சொல்லித் தரவில்லை

நீதிபதி :—உனக்கு இந்த எதிர்க் கட்சிக் காரரைத் தெரியுமா?

சாட்சி :—எனக்கு ஒருவரையும் தெரியாது.

நீதிபதி :— அப்படியானால், அவர்கள் வாதியை அடித்தபோது நீ பார்த்ததாக ஏன் சொல்லுகிறாய்?

சாட்சி :—ஐயோ! இது என்ன அநியாயம்? இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல அவர்கள் சொல்லித் தரவில்லையே!

—ஏ. ஆர். பாலகிருஷ்ணன்.

★

## பேஷ்!

பிரசங்கி :—நான் பேசப் போவதில் உள்ள குற்றம் குறைகளை நீக்கி, சாராம்சத்தை மட்டும் கிரகித்துக்கொள்ள வேணுமாய்......"

அதிகப் பிரசங்கி (இடைமறித்து):—அவ்வளவு சிரமம் எதற்கு? சாராம்சத்தை மட்டும் சொல்லிவிட்டாலே போதுமே!

—ஆர். ஸ்ரீநிவாசன்.

★

## எப்படிச் சம்பாதித்தது?

பிரசங்கி :—என்னிடமுள்ள ரூபாய்களில், ஒவ்வொரு காசையும் நெற்றி வியர்வை நிலத் தில் விழக் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கப்பட் டது என்பதை அறிவிக்க விரும்புகிறேன்.

கும்பலில் ஒரு குரல் :—யாரால் கஷ்டப்பட்டுச் சம்பாதிக்கப்பட்டது என்பதையும் தெரி வித்தால் நலம். —என். என்.

## நல்ல கேள்வி!

நீதிபதி :—கொலையாளி, குற்றவாளி இல்லை என்று விடுவிக்கத் தக்க ரூஜுவோ, காரணமோ உண்டா?

ஜூரர்கள் :—'பைத்தியம்' என்கிற ஒரே காரணமே போதுமே!

நீதிபதி :—அப்படியானால் நீங்கள் எல்லாருமே 'பைத்தியம்' என்று ஏகமனதாக ஒப்புக் கொள்ளுகிறீர்களா? —"ஸ்ரீமான்"

★

## முக்கால் கெஜம் மழை!

முதலவன் :—அண்ணே, நேத்து எப்படி மழை பார்த்தியா? பேப்பர்லே என்னமோ எட்டு இஞ்சின்னு போட்டிருக்காமில்லே!

மற்றவன் :—தம்பி, அது தப்புங்கிறேன்! அவங்க சின்னப் பாத்திரமா வச்சு அளந்திருப் பாங்க. பாரு, நேத்தி நம்ம அய்யா வீட்டு கூடலே ஒழுகுதுன்னு ஒரு பெரிய பானையை வச்சிருந்தேன். அது பூரா ரொம்பிடுச்சுங்க றேன். அப்புறம் அதை அளந்து பார்த்தாரு நம்ப அய்யாரு. முக்கால் கெஜம் இருந்துச்சு!

—டி. எஸ். சவ்வரன்.

★

## தெரிந்த விஷயம்

ஒரு லைனில் ஒருவன் அடிபட்டுக் கீழே விழுந்து விட்டான். லைனின் ஓட்டி கீழே இறங்கி வந்து அனுதாபத்துடன், "அப்பா, இப்படிக் குறுக்கே முன்பின் பாராமல் ஓடி வரலாமா? உன் பெயரைச் சொல்லு; உன் பெற்றோர்களிடம் சொல்கிறேன்" என்றான்.

கீழே விழுந்தவன் (முனகிக் கொண்டே):—எங்கப்பாவுக்குத்தான் என் பேர் தெரியுமே!

—ஜே. சகுந்தலா

★

## உண்மை!

வீடு வாடகைக்கு விடுபவர் (ஒரு சிறிய உள்ளறையைக் காண்பித்து):—இதுக்கு எட்டு ரூபாய்தான் வாடகை. எப்படிப்பட்ட ரும் தெரியுமா? இந்த அறையைப் பார்க்க



வந்தவங்க எல்லாரும் ஒரே குதியாய்க் குதிக்கிறார்கள்!

பார்க்க வந்தவர் :—ஆமாண்ணு: எனக்குக் கூட வாடகையைக் கேட்டவுடனே என்னை அறியாமல் தூக்கிப் போட்டது! —ஜே. என்.



# என்ன பாவம்

எனக்கு உலகம் இன்னதென்று ஒருவாறு தெரிந்த பிறகு, என் வாழ்க்கையின் முதல் அத்தியாயம் ஆரம்பமாயிற்று. அப்போதுதான் என் தந்தைக்குப் பாரமா யிருப்பதை நான் ஓரளவு உணர்ந்தேன்.

வேலையிலிருந்து வீடு திரும்பியதும், "ராஜினி, ராஜினி!" என்று இரைவார் என் அப்பா. அந்தக் குரலில் தேனின் இனிமையும் பாலின் சுவையும் கலந்திருப்பதுபோல் எனக்குத் தோன்றும்.

அக்கம் பக்கத்து வீடுகளில் அதுவரை என் அன்புக்குகந்த தோழர்—தோழிகளுடன் விளையாடிக் கொண்டிருக்கும் நான், அதைக் கேட்டு ஓடோடியும் வருவேன்.

அன்புடன் என் கன்னத்தைக் கிள்ளி, ஆசையுடன் என்னைத் தூக்கிக் கொண்டு வீட்டுக்குள் நுழைவார் என் அப்பா.

அங்கே வித விதமான பட்சண வகைகளெல்லாம் எனக்காகக் காத்துக் கொண்டிருக்கும். எல்லாம் எனக்கென்று என் அப்பா வாங்கி வந்தவைதான். அவற்றையெல்லாம் ஒருவாறு தீர்த்துக் கட்டுவதற்கும், "காப்பிகூடச் சாப்பிடாமல் இத்தனை நாழி எங்கே போயிருந்தாயாம்?" என்று அம்மா என்னைச் செல்லமாகக் கடிந்த வண்ணம் காப்பி கொண்டு வருவதற்கும் சரியாயிருக்கும். அதையும் குடித்து வைத்த பிறகு, அம்மா என்னைத் தன் மனதுக்குப் பிடித்த மாதிரி அலங்காரம் செய்து வைப்பதில் முனைவாள்.



ஒரு நாளாவது எனக்கென்று எதும் செய்து கொள்ள என்னை விடுவதில்லை என் அம்மா. உயிரற்ற என் விளையாட்டுப் பொம்மைகளில் என்னையும் ஒன்றாக அவள் எண்ணி விட்டாளோ என்னமோ! இல்லையென்றால், என் முகத்தை நானே அலம்பிக் கொள்ளக் கூடவா அவள் என்னை விடமாட்டாள்?

அம்மாவின் லட்சணம்தான் இப்படியென்றால், அப்பாவின் லட்சணமாவது அதற்குக் கொஞ்சம் விரோதமாயிருக்கக் கூடாதோ? அதுவும் இல்லை. அவரிடம் நான் ஏதாவது என்னைப் பற்றிச் சொல்ல வாயெடுத்தால் போதும், "உனக்கெதற்கு, அந்தக் கவலை யெல்லாம்?" என்று கேட்டு, எல்லாக் கவலைகளையும் தன் தலையிலேயே போட்டுக் கொள்வார்!

"எதற்கும் நான் ஏதாவது ஒரு தொழிலுக்குப் படித்து வைக்கிறேனே, அப்பா!" என்றால், "குழந்தையும் குட்டியுமாகக் குடித்தனம் செய்வதைவிட, வேறு தொழில் உனக்கு என்னத்திற்கு?" என்று கேட்டு என் வாயை அடக்கிவிடுவார்.

யோசித்துப் பார்த்தால், இப்போது நான் கொஞ்ச நஞ்சம் எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டிருக்கிறேனே, அதுகூட எனக்காக இல்லையென்று தோன்றுகிறது.

வேடிக்கையைத்தான் கேளுங்களேன்:

என்னைப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதற்காக என் அப்பா பிரயத்தனப்பட்டுக் கொண்டிருந்தபோது, "இந்தக் காலத்துப் படித்த பெண்களின் நடவடிக்கைகளைப் பார்த்தால், நம்ம ராஜினியை ஏன் படிக்க வைக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது!" என்றாள் அம்மா.

"சில சமயம் எனக்கும் அப்படித்தான் படுகிறது! ஆனாலும் இந்தக் காலத்துப் பையன்கள்தான், 'பெண்ணுக்குப் படிக்கத் தெரியுமா, பாடத் தெரியுமா, ஆடத் தெரியுமா?' என்றெல்லாம் கேட்க ஆரம்பித்து விட்டார்களே! அவர்கள் கேட்பதைப் பார்த்தால் உலகத்திலுள்ள ஒவ்வொரு பெண்ணும் 'ஏ ஒன் ஸினிமா ஸ்டா'ராக இருக்க வேண்டுமென்று நினைப்பது போலவல்லவா இருக்கிறது! அதற்காகத்தான் இவளைப் படிக்க வைக்க வேண்டுமென்று பார்க்கிறேன்'" என்றார் அப்பா.

எப்படியிருக்கிறது, கதை? எப்பொழுதோ எவனோ வரப் போகிறானே, அவனுக்காக என்னைப் படிக்க வைத்தார்களாம். எனக்காக, என் வயிற்றை நானே வளர்த்துக் கொள்வதற்காக, அவசியமானால் என் உயிரை நானே காப்பாற்றிக் கொள்வதற்காக, வேறொருவர் துணையின்றி நானும் இந்த உலகத்தில்

# செய்தேன்?



சுய மரியாதையோடு உயிர் வாழ்வதற்காக—அவர்களும் ஒன்றும் செய்ய மாட்டார்களாம்; என்னையும் ஏதாவது செய்து கொள்ள விடமாட்டார்களாமே!

பார்க்கப் போனால், நானாக ஆக என்னைப் பற்றி அவர்களுக்கு ஒரே ஒரு கவலைதான் மிஞ்சியிருந்ததாக எனக்குத் தோன்றிற்று. அந்தக் கவலை இன்னதென்று இதற்குள் நீங்கள் ஊகித்துக் கொண்டிருப்பீர்கள்—ஆமாம், உலக வழக்கத்தை யொட்டித் தாங்கள் கண்ணை மூடுவதற்குள் எனக்குக் கல்யாணத்தைப் பண்ணி வைத்து விட வேண்டுமென்பதுதான் அவர்களுடைய கவலை!

அதற்கேற்றாற்போல், அத்தகைய கவலையை அவர்களுக்கு அளிக்கக் கூடிய வயதை நானும் அப்போது அடைந்திருந்தேன். என் உடம்பிலே புதிய தெம்பு, உள்ளத்திலே ஒரு விதமான உணர்ச்சி, அங்க அவயவங்களிலே ஒரு தினுசான கவர்ச்சி, கண்களிலே யாரையும் கவர்ந்து விடும் அதிசயமான காந்த சக்தி, இதழ்களிலே அற்புதமான அழகு — எல்லாம் என்னை வந்து அடைந்து விட்டன!

இந்த மாறுதல் என்னோடு இருந்து தொலைந்திருக்கக் கூடாதா? என் தாய் தந்தையர் அதுவரை என்னிடம் காட்டி வந்த அன்பிலும் ஆதரவிலும்கூட அந்தப் பாழும் மாறுதல் நுழைந்துவிட்டது!

முன்போல், "ராஜினி, ராஜினி!" என்று அப்பா என்னை அழைக்கும்போது, அந்தக் குரலில் தேனின் இனிமையும் பாலின் சுவையும் கலந்திருப்பது போல் எனக்குத் தோன்றவில்லை; விஷமும் விளக்கெண்ணெயும் கலந்திருப்பது போல்தான் தோன்றும்!

"என் அப்பா!" என்று கேட்டுக் கொண்டே வந்தால், அவர் முன்போல் என் கன்னத்தை அன்புடன் கிள்ளி, ஆசையுடன் தூக்கி வைத்துக் கொள்வதில்லை. "போ, உள்ளே! இன்னொரு தரம் அங்கேயெல்லாம் போனாயோ, உன் காலை ஒடித்து விடுவேன்!" என்று எரிந்து விழுவதோடு இல்லாமல், என் கழுத்தையும் பிடித்து உள்ளே தள்ளி வைப்பார்!

அவர் மட்டுமா? அம்மாவும், "காப்பி கூடச் சாப்பிடாமல் இத்தனை நாழி எங்கே போயிருந்தாயாம்?" என்று முன்போல் என்னைச் செல்லமாகக் கடிந்து கொள்வதில்லை; "இத்தனை நாழி வெளியே என்னடி வேலை, உனக்கு? பேசாமல் ஒரு மூலையைப் பார்த்துக் கொண்டு உட்காரு!" என்பாள், முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க!

"இதென்ன வேடிக்கை! இவர்கள் இப்படி எரிந்து விழும்படியாக நாம் என்ன குற்றம் செய்தோம்?" என்று ஒன்றும் புரியாமல் நான் விழிப்பேன்.

என் வாழ்நாட்கள் இப்படியே புரிந்தும் புரியாமலும் சென்று கொண்டிருந்தன. கடைசியில், என் பெற்றோர் கவலையைத் தீர்க்கும் அந்த நாளும் வந்தது. "இது வரை உன் பெற்றோர் உன்னைக் காப்பாற்றியது போதும்; இனிமேல் நான் காப்பாற்றுகிறேன், வா!" என்று சொல்லிக் கொண்டு யாரோ முன் பின் தெரியாத ஒருவன் வந்து என் கரங்களைப் பற்றினான்!

"நம்மால் யாரையுமே காப்பாற்ற முடியாதா? நம்மைத்தானா பிறர் மாறி மாறி வந்து காப்பாற்ற வேண்டும்!" என்ற அதிசயத்துடன் நான் சற்றுத் தயங்கினேன்.

"உம், ஆகட்டும்!" என்றார்கள், எங்களைச் சுற்றி யிருந்தவர்கள்.

அவ்வளவுதான்; எல்லோரையும் விட அந்த மேளக்காரனும் நாதஸ்வரக்காரனும் தான் மோசம்; அன்று அவர்கள் என்னை என்ன கதி கலங்க வைத்து விட்டார்கள்!

அதுதான் சமயமென்று அதுவரை என் அருகே பொறுமையே பூரணமாக உட்கார்ந்திருந்த அந்த மனிதரும், அவசர அவசரமாக என் கழுத்தில் எதையோ கட்டி வைத்தார்!



அப்புறம் கேட்க வேண்டுமா? அவர் இட்டதுதான் சட்டம்; எனக்குத் திருப்தியிருக்கிறதோ, இல்லையோ — எல்லா விதத்திலும் அவரைத் திருப்தி செய்வதுதான் என்னுடைய வேலை! — அவர் எவ்வளவுதான் சம்பளம் கொடுப்பதாகச் சொல்லட்டுமே, என்னைப் போல் ஆயுள் முழுவதும் அடிமையாயிருக்கக் கூடிய ஒரு அப்பாவி வேலைக்காரி அவருக்குக் கிடைப்பாளா, என்ன?

நான் என்னத்தைச் சொல்ல? 'கல்யாணம்' என்ற 'பெயரில்—பட்டப் பகலில்—பல பேர் முன்னிலையில் நடந்த இந்த அக்கிரமத்தைக் கண்டு என் பெற்றோர் இதயம் பூரித்துப் போனார்கள்! — அத்துடன் அவர்கள் நிற்கவில்லை; தங்கள் கவலை தீர்ந்ததென்று எண்ணியோ என்னமோ, சிறிது காலத்துக்கெல்லாம் ஒருவர் பின் ஒருவராகக் கண்ணையும் மூடி விட்டார்கள்!

★

என் வாழ்க்கையின் முதல் அத்தியாயம் முடிந்தது. இரண்டாம் அத்தியாயம் ஆரம்பமாயிற்று. அதாவது, நேற்றுவரை என் தந்தைக்குப் பாரமாயிருந்த நான், இன்று என் கணவருக்குப் பாரமானேன்!

ஆரம்பத்தில் என் கணவர் என்னிடம் காட்டிய அன்பு, சின்னஞ் சிறு வயதில் என் தகப்பனார் என்னிடம் காட்டிய அன்பைக் கூடத் தூக்கியடிப்பதாயிருந்தது. அதைக் கண்டு நான் அடைந்த பெருமைக்கு ஓர் எல்லையே யில்லை. வெறும் புத்தக அனுபவத்துடன் இருந்த எனக்கு, அந்த அன்பு அமரத்துவம் வாய்ந்ததென்றே முதலில் தோன்றிற்று. உண்மையில் அவர் என் மீது காதல் கொள்ளவில்லை, என் 'கன்னிப் பருவ'த்தின் மீதுதான் காதல் கொண்டார் என்பதைப் பிறகுதான் உணர்ந்தேன்!

அந்த நாளில் அவரைக் கண்ட மாத்திரத்தில் என்னை வெட்கம் பிடுங்கித் தின்னும். எதிரே நிற்பதென்றால் என்னவோ மாதிரியிருக்கும். தப்பித் தவறி அவரிடம் ஒரு வார்த்தை பேசி விட்டாலோ, என் உடம்பே சில்லிட்டுப் போகும்!

அவரோ என்னை நேருக்கு நேராக ஒரு முறையாவது பார்த்துவிட வேண்டுமென்றும், ஒரு வார்த்தையாவது பேசிவிட வேண்டுமென்றும் துடியாய்த் துடிப்பார்! ஆடு திருடிய கள்ளனைப்போல் அக்கம் பக்கம் பார்த்து விழித்த வண்ணம், "ராஜினி, ராஜினி!" என்று மெல்லிய குரலில் அழைத்துக் கொண்டே, என்னைச் சுற்றிச் சுற்றி வருவார். அவரைக் கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டே நான் காரியமும் கையுமாக இருப்பேன். ஒரு காரியமும் இல்லாதபோது கூட யாரையாவது கூப்பிட்டு வைத்துக் கொண்டு சாங்கோபாங்கமாகப் பேசிக் கொண்டிருப்பேன்!—ஆமாம், அவர் எவ்வளவுக்கெவ்வளவு ஏமாற்றமடைகிறாரோ, அவ்வளவுக்கவ்வளவு அப்போது எனக்கு ஆனந்தமாய்த்தானிருந்தது!

போனால் போகிறதென்று நான் எப்பொழுதாவது அவரிடம் ஒரு வார்த்தை பேசி விட்டால் போதும்; இந்த உலக சாம்ராஜ்யமே தம்முடைய கைக்குக் கிட்டி விட்டது போன்ற ஒரே குதூகலத்தில் ஆழ்ந்து விடுவார் அவர்!

இந்த ரஸமான வாழ்க்கை நெடுநாள் நீடிக்கவில்லை. சிறிது காலத்துக்கெல்லாம் காதலும் ஊடலும் குடிகொண்டிருந்த எங்கள் வாழ்க்கையில் கோபமும் தாபமும் வந்து குடிகொண்டன. அன்று என்னை ஒரு முறையாவது நேருக்கு நேராகப் பார்த்து, ஒரு வார்த்தையாவது பேசிவிட வேண்டுமென்று அவர் என்னைச் சுற்றிச் சுற்றி வந்தது போய், இன்று அவரை ஒரு முறையாவது நேருக்கு நேராகப் பார்த்து, ஒரு வார்த்தையாவது கேட்டுவிட வேண்டுமென்று நான் அவரைச் சுற்றிச் சுற்றி வந்தேன்! இந்த நிலையிலே நான் எதற்காகப் பெண்ணாய்ப் பிறந்தேனோ, அதற்காக இரண்டு குழந்தைகளையும் பெற்று வைத்தேன்!

நாங்கள் இருவரும் ஒருவருக் கொருவர் பரிமாறிக் கொண்டிருந்த அன்பு அத்தனை

யும் சேர்த்து அந்தக் குழந்தைகளாக உரு வெடுத்து வந்து விட்டனவோ என்னவோ, அதற்குப் பிறகு எங்கள் வாழ்க்கையில் துளிக்கூட அன்பே யில்லாமற் போய் விட்டது. நாளடைவில் அவர் என்னை எலி யைப்போல் பாவிப்பதும், அவரை நான் பூனையைப்போல் பாவிப்பதும் சர்வ சாதா ரண மாகிவிட்டது.

இதனால் அந்த வீட்டில் குடித்தனம் செய்வதை 'என் தலைவிதி' என்று நான் நினைத்துக் கொண்டேன்; அந்தக் குடித் தனம் நடப்பதற்கு வேண்டிய வரும்படி தேடுவதை 'தன் தலைவிதி' என்று அவர் நினைத்துக் கொண்டார்!

இந்த லட்சணத்தில், 'ஏன் பிறந்தோம்?' என்ற நிலையில் எங்கள் குழந்தைகளும் வளர்ந்து வந்தன.

போதிய பணம் மட்டும் இருந்திருந்தால், வாழ்க்கையில் அமைதியைக் காணாவிட் டாலும், எங்கள் துன்பத்தையாவது எதிர்த்து நின்று ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கலாம் என்பது உண்மைதான்; ஆனால், அதுதானே எங்களிடம் இல்லை?

★

என் வாழ்க்கையின் இரண்டாம் அத்தியாயம் ஆரம்பமாகி, எப் படியோ பத்து வருஷங்கள் கழிந்து விட்டன. இனி மூன்றாம் அத்தி யாயம் ஒன்றுதான் பாக்கி யிருந் தது. அதாவது, முதலில் என் தந் தைக்குப் பாரமா யிருந்து, பின்னால் என் கணவருக் குப் பாரமாயிருந்த நான், இப்போது என் மகனுக்குப் பாரமாக வேண்டும்!



இந்த மூன்றாவது அத்தியா யத்தோடு மற்றப் பெண்க ளுடைய வாழ்க்கையைப் போல் என்னுடைய வாழ்க்கையும் முடிந்து விடும். ஆனால், அதற் குக் குடும்ப பாரத்தைத் தாங் கக் கூடிய வயதை என் மகன் அடைய வேண்டி யிருந்தது. ஆகவே, அதுவரை ஒன்று என் கணவர் உயிருடன் இருந்தாக வேண்டும்; இல்லையென்றால் நான் அவ ருக்கு முன்னால் இறந்துபோகவேண்டும்!— இதுதானே நம் பாரத நாட்டுப் பெண்மணி களுக்குப் பெரியோர் வகுத்துள்ள வழி?

வழி, நல்ல வழியா யிருக்கலாம். ஆனால் யமனுடைய ஒத்துழைப்பும் அல்லவா அதற்கு அவசியம் வேண்டி யிருக்கிறது?

இப்பொழுதுதான் எனக்குத் தெரி கிறது — சின்னஞ் சிறு வயதிலே எத் தனையோ தாய்மார்கள், "இந்த மஞ்சள் குங்குமத்தோடு என்னை அவருக்கு முன்னால் கொண்டு போய்விடு, பகவானே!" என்று பிரார்த்திக்கக் கொள்வதை நான் கேட் டிருக்கிறேன். அந்தப் பிரார்த்தனையில் தான் எவ்வளவு பொருள் பொதிந்து கிடக்கது!

உண்மை இப்படி என்று தெரிந்த பிறகு, நானும் அப்படியே பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தேன். வாழ்வதற்காக அல்ல; சாவதற்காகத்தான்!

என்னுடைய பிரார்த்தனைக்கு இறைவன் செவி சாய்க்கவில்லை. திடீரென்று ஒரு நாள் என் கணவரை அந்தப் பொல்லாத காலன் வந்து அழைத்துச் சென்ற போது, அந்தப் பாழும் கடவுள் வழக்கம் போல் திடீரென்று தோன்றி அவனைக் காலால் உதைக்கவில்லை!

ஆகவே, நான் அனாதையானேன். அத் துடன் சம்பிரதாயப்படி என் மகனுக்கு நான் பாரமாயிருப்பது போய், அவன் எனக் குப் பாரமானான்!

இந்த லட்சணத்தில்தான் என் வாழ்க் கையின் மூன்றாம் அத்தியாயம் ஆரம்ப மாகி யிருக்கிறது. எனக்கோ குழந்தை குட்டியுடன் குடித்தனம் செய்வதைத் தவிர வேறொன்றும் தெரியாது. என் அப்பாவும் அந்தக் காலத்தில் எனக்கு அவ் வளவு தெரிந்தால் போதுமென்று தானே சொன்னார்?

என்னவோ, நடந்தது நடந்து விட்டது. இப்பொழுது யாரு டைய வரும்படியைக் கொண்டு குடித்தனத்தை நடத்துவது?

பாங்கிக்காரர்களும், இன்ஷ் யூரன்ஸ் கம்பெனிக்காரர்களும் ஏழைகளுக்கு உதவப்போவதில்லை. ஏனெனில், முதலில் நாங்கள் அவர்களுக்கு உதவி செய்ய வில்லை!

ஐயோ! என்னை நானே காப் பாற்றிக் கொள்ளக் கூடிய நிலை யில் இல்லாத எனக்கு யார் உதவப் போகிறார்கள்? இந்தக் கதிக்கு ஆளாக நான் பெண்ணாய்ப் பிறந்ததைத் தவிர, வேறு என்ன பாவம் செய்தேன்?

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

# மங்கையர்களின் முக விலாசத்திற்கே

## அர்ப்பணம் செய்யப்பட்டது.




# ஜாப்கோ ஸ்னோ

உங்கள் எழிலை அதிகப் படுத்த இதைவிடச் சிறந்தது வேறெதுவும் இல்லை

•

**ஜயபாரதம் கோ.,**
**மல்லேஸ்வரம் - பெங்களூர்**

# ஜேஸனில் தீட்டி க்ஷவரம்

## செய்து கொள்வது தனி இன்பம்

ஜேஸன் ஸேப்டி ரேஸர் பிளேட் ஸ்டிராப்

முதலாவதாக புதிய பிளேடை இன்னும் சிறப்பாக்குகிறது: இரண்டாவதாக இந்த ஸ்டிராப்பை சரியான முறையில் கையாண்டால், ஒரே பிளேடை காலவரையின்றி உபயோகிக்கலாம்.




# ஜேஸன் ஸ்டிராப்

## சுத்தமான அழுத்தமான தோலால் ஆனது

சென்னை மாகாணம், மைசூர், திருவாங்கூர், கொச்சி, புதுக்கோட்டை சமஸ்தானங்களுக்கு ஏஜண்டுகள்:

**கார்டன் வுட்ராப் & கம்பெனி (சென்னை) லிமிடெட்**
தபால் பெட்டி நெ. 42, சென்னை

பங்களூர், கொச்சி, கோயமுத்தூர்
மதுரை, பெஜவாடா, விசாகப்பட்டணம்

DJK 31. TM.

